# வேதாந்தத்திற்கு ஓர் அறிமுகம்

# வேதாந்தத்திற்கு ஓர் அறிமுகம்



**VIDYA VILASAM TRUST**

12, TRUST SQUARE STREET,

RAMALINGAPURAM,

MADRAS - 600 012.

20-5

# பொருளடக்கம்

ௐ 20-5

# முகவுரை

உபநிஷத், கீதை முதலிய தத்துவ நூல்களைக் கற்றறிய முற்படுவோர்கள் முதலில் அடிப்படையாகச் சில கருத்துக்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். தேவையான அடிப்படை அறிவைக் கொடுப்பதே இவ்வெளியீட்டின் நோக்கம்.

உபநிஷத் பாடத்தைக் கேட்கத் துவங்குபவர்களுக்காக சுவாமி பரமார்த்தானந்தர் அவர்கள் வகுத்துக் கொடுத்த தலைப்பின் கீழ் எடுக்கப்பட்ட வகுப்புக்களே இங்கு புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளது.

இந்நூல் வேதாந்த சாஸ்திரத்திற்கு அறிமுகமாகவும், வேதாந்த சாஸ்திரத்தின் ஸாரமாகவும் அமைந்துள்ளது.

- குருபர சைதன்ய.

# I. புருஷார்த்தம்
# पुरुषार्थः

எல்லா உயிரினங்களும் வாழ்கின்றன எனிலும் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் வாழ்வில் வேறுபாடு உண்டு. கீழ்க்கண்ட சுலோகம் மனிதன் மிருகத்துடன் எதில் வேறுபடுகிறான், எதில் வேறுபடவில்லை என்று காட்டுகிறது.

आहारनिद्राभयमैथुनं च सामान्यमेतत् पशुभिर्नराणाम् ।
बुध्द्रिर्हि तेषॉं अधिको विशेष : बुध्याहीना : पशुभि : समाना : ॥

ஆஹார - நித்ரா - பய - மைத்துனம் ச ஸாமான் ய மேதத்
பசுபிர்நராணாம் ।
புத்திர்ஹி தேஷாம் அதிகோ விசேஷ : புத்யாஹீனா : பசுபி :
ஸமானா : ॥

**சுலோகத்தின் பொருள் :**

உணவு, உறக்கம், பயம், இனப்பெருக்கம் - இவற்றில் மனிதர்களுக்கு மிருகங்களுடன் வேறுபாடில்லை. மனிதர்களுடைய தனித்தன்மை அறிவு. அறிவை இழந்தோர் மிருகங்களுடன் ஒன்றாகின்றனர்.

இந்த சுலோகத்தில் மனிதனுக்கும் மிருகத்திற்கும் நான்கு ஒற்றுமைகள் கூறப்படுகின்றன. அவையாவன

(1) உணவு உட்கொள்ளுதல் (2) உறங்குதல் (3) அச்சப்படுதல் (4) இனப்பெருக்கம் செய்தல்.

இந்த நான்கையும் மனிதனும் செய்கிறான், மிருகமும் செய்கின்றது

பின் மனிதன் எதில் வேறுபடுகிறான்? அறிவு. இங்கு அறிவு என்பது எது சரி, எது தவறு, எது உண்மை, எது பொய் என்று பகுத்துக் காட்டும் சக்தியைக் குறிக்கிறது. இந்த அறிவின் பயனாகவே மனிதன் தனக்கென ஒரு குறிக்கோளைத் தேர்ந்தெடுத்து அதற்காக வாழ்வைப் பயன்படுத்த முடிகிறது. மிருகங்களுக்குக் குறிக்கோள் இல்லை. அவைகள் ஒரு லக்ஷியத்திற்காக வாழவில்லை. ஆனால் மனிதன் தான் இதை அடைய வேண்டும் எனக் குறிக்கோள் வைக்கின்றான். குறிக்கோளை வைத்து அதற்கேற்ப நெறியைப் பின்பற்றி வாழ்தல் மனிதனுக்கு என்றே கொடுக்கப்பட்ட அறிவால் தான்.

மனிதன் அடையவிரும்பும் குறிக்கோள் சமஸ்க்ருதத்தில் புருஷார்த்தம் (**पुरुषार्थः**) என்று கூறப்படுகிறது. மனிதனால் எது தேடப்படுகிறதோ அல்லது வேண்டப்படுகிறதோ அது புருஷார்த்தம் என அழைக்கப்படுகிறது. (**पुरुषेण अर्थ्यते प्रार्थ्यते इति पुरुषार्थः**) மனிதனுடைய மனதில் பல குறிக்கோள்கள் இருக்கின்றன. இந்தக் குறிக்கோள்கள் அனைத்தையும் சாஸ்த்திரம் நான்கு தலைப்புகளில் அடக்குகிறது. அவைகள் முறையே (1) தர்மம் (2) அர்த்தம் (3) காமம் (4) மோக்ஷம். இவைகள் தான் தமிழில் (1) அறம் (2) பொருள் (3) இன்பம் (4) வீடு என்று அழைக்கப்படுகின்றன. நாம் வாழ்வில் எதை நாடினாலும் அதை இந்த நான்கில் எதாவது ஒன்றில் அடக்கலாம்.

## 1. அர்த்தம் - பொருள் :-

மனிதனின் முதல் குறிக்கோள், தான் வாழ வேண்டும் என்பதே. வாழவேண்டுமானால் பொருள்கள் தேவை. இருக்க இடம், உண்ண உணவு, உடுத்த ஆடை, ஆகிய பொருள் தேடுவது மனிதனின் முதல் புருஷார்த்தம். தன்னைப் பாதுகாக்க தேடப்படும் கல்வி, வேலை, பொருள், வீடு இவை போன்ற அனைத்தும் அர்த்தம் என்ற தலைப்பில் வரும்.

## 2) காமம் - இன்பம் :-

வாழவிரும்பும் மனிதன் இன்பமாக அன்றோ வாழ விரும்புகிறான். முதலில் வாழத் தேவையான பொருளை நாடியபின் அவன் மனம் இன்பத்தை நாடுகிறது. பசித்திருப்பவன் உணவை நாடுவான். சிறிது உணவு கிடைக்கப் பெற்றபின் சுவையான உணவை நாடுவான். ஆடை கிடைத்தால் பின் அதில் அலங்காரத்தை நாடுகிறான். இவ்விதம் இன்பத்திற்காக பொருளை நாடுதல் இன்பம் என்ற தலைப்பில் வரும். தனக்கு தேவையான பாதுகாப்பை அடைந்ததற்கு பிறகு இன்பத்திற்காக மட்டும் தேடப்படும் பொருள் இன்பம் என்ற புருஷார்த்தம்.

## 3) தர்மம் - அறம் :-

இங்கு அறம் என்ற சொல்லிற்கு புண்ணியம் என்று பொருள். வாழ்விற்கு தேவையான பொருள், இன்பம் இவ்விரண்டும் என்றும் கிடைக்க வேண்டும் என ஆசைப்பட்டு

அதற்காக புண்ணியத்தை சேகரிக்க தானம், யாகம் முதலிய காா்யத்தில் சிலா் ஈடுபடுவாா்கள். ஆக புண்ணியத்தை தேடுதல் ஒரு குறிக்கோள் ஆகிறது. புண்ணியம் தான் நமக்கு பொருளும் இன்பமும் கொடுக்கும் என்று நம்புபவா்களுக்கு இதுவும் ஒரு குறிக்கோள் ஆகிறது.

## 4) மோக்ஷம் - வீடு :-

முன் கூறிய மூன்று புருஷாா்த்தங்களிலிருந்து கிடைக்கும் சுகம் நிலையற்றது என உணா்ந்து முழுமையான மனநிறைவை நாடுதல் வீடு அல்லது மோக்ஷம் என்ற புருஷாா்த்தம். मोक्ष (மோக்ஷ) என்றால் விடுபடுதல் என்று பொருள். விடுபடுதல் என்றால் எதிலிருந்து? நம் மனமே நமக்கு ஏற்படுத்திய துயரத்திலிருந்து விடுபடுதல், காமம், கோபம், லோபம், பொறாமை, பயம் முதலியவற்றிலிருந்து விடுபட்டு எதையும் சாராமல் மனநிறைவை அடைவதற்குச் செய்யும் முயற்சியே மோக்ஷ புருஷாா்த்தம் எனப்படும்.

இவ்விதம் ஒரு மனிதன் எதை அடைய முயற்சி செய்தாலும் அதை மேற்கூறிய நான்கு தலைப்புகளில் அடக்கலாம்.

# II சாஸ்திரம் - शास्त्रम्

மனிதனுக்கு அவனுடைய குறிக்கோளையும், அதை அடைய வழியையும் எது வகுத்து வழங்குகிறதோ அதற்கு சாஸ்திரம் என்று பெயர். **शासनात् शास्त्रम्** (சாஸனாத் சாஸ்திரம்) ஆணையிடுவதால் சாஸ்திரம். அல்லது **शास्ति उपदिशति इति शास्त्रम्** ( சாஸ்தி உபதிசதி இதி சாஸ்திரம் ) உபதேசம் செய்வதால் சாஸ்திரம். இவ்விதத்தில் எது ஆணையிடுகிறதோ, அல்லது போதிக்கிறதோ அது சாஸ்திரம்.

வேதம் சாஸ்திரமாகிறது. புருஷார்த்தத்தையும் அதாவது, மனிதனின் குறிக்கோளையும் அதை அடையும் மார்க்கத்தையும் எதனால் அறிகிறோமோ அது வேதம். **पुरुषार्थ - साधनं विदन्ति अनेन इति वेद :** ( புருஷார்த்த ஸாதனம் விதந்தி அனேன இதி வேத : ) எதனால் மனிதர்கள் புருஷார்த்த ஸாதனத்தை அறிகின்றார்களோ அது வேதம். வேதமானது அனாதி காலமாக இருந்து வருகிறது. ஆராய்ச்சியாளர்கள் வேதத்திற்கு காலத்தைக் கல்பிக்க முற்படுவர். மரபுப்படி வந்த சான்றோர்கள் வேதம் ஈச்வரனிடம் இருந்து வந்ததாகவே கொள்வர். இவ்வுலகம் இறைவனிடத்து வந்தது எனில், இவ்வுலகில் வாழும் முறை, இவ்வுலகில் அடையவேண்டிய முடிவு, இவை பற்றிய அறிவைக் கொடுக்கும் வேதமும் ஈச்வரனிடமிருந்தே தோன்றி

இருக்க வேண்டும் என்பது பெரியோர்களின் தீர்வு. ஒரு மனிதனிடமிருந்து தோன்றாமையால் வேதத்தில் குறை இருக்க முடியாது. முழு நம்பிக்கையை நாம் வேதத்தில் வைக்க வேண்டும். ஏனெனில் வேதத்தின் மூலம் இறைவன் அன்றோ பேசுகிறான். இறைவனை நம்புவதும் இறைவன் சொல்லான வேதத்தை நம்புவதும் ஒன்றே. வேதம் ஒரு சாஸ்திரமாக இருந்த போதிலும் வ்யாஸ முனிவர் கீழ்க்கண்ட அடிப்படையில் நான்காகப் பிரித்தார்.

1) ருக் வேதம் - ऋग् वेद : - இது அதிகம் செய்யுள் பகுதிகளைக் கொண்டது.

2) யஜுர் வேதம் - यजुर्वेद : - இது அதிகம் உரைநடைப் பகுதிகளைக் கொண்டது.

3) ஸாம வேதம் - साम वेद : - இசையுடன் பாடப்பட்ட மந்திரங்களைக் கொண்டது.

4) அதர்வண வேதம் - अथर्वण वेद : - அதர்வன முனியினால் வெளியிடப்பட்டதால் இப்பெயர் வருகிறது.

வேதங்கள் இறைவனிடம் இருந்து வந்தது என்று பார்த்தோம். இறைவன் தூய்மையடைந்த ரிஷிகளின் மூலம் அதாவது ரிஷிகளைக் கருவியாகக் கொண்டு வேத மந்திரத்தை வெளிப்படுத்தினார். அந்த ரிஷிகள் மந்திரத்தை வெளியிட்டாரே அன்றித் தோற்றுவிக்கவில்லை. அப்படிப்பட்ட ரிஷிகள் मन्त्रद्रष्टारः (seers) மந்த்ர த்ரஷ்டார :- மந்திரத்தைக் கண்டோர்கள்

என அழைக்கப்படுகிறார்கள்.

வேதத்தில் என்ன கருத்துகள் பேசப்படுகின்றன எனப் பிறகு ஆராய்வோம். வேதத்தில் பேசிய கருத்தை மனதில் கொண்டு, ' வேதத்தின் கருத்தை விளக்க முனிவர்களால் எழுதப்படும் சாஸ்திரங்களுக்கு स्मृति - ஸ்ம்ருதி என்று பெயர். வேதார்த்த அனுவாத வாக்யம். வேதத்தில் கூறப்பட்டுள்ள பொருளைத் திருப்பக் கூறும் நூல். வேதங்களின் பொருள் முரண்படாமல் முனிவர்களது மொழியில் தோன்றியவையே ஸ்ம்ருதி, மனு ஸ்ம்ருதி, யாக்ஞ்யவல்க்ய ஸ்ம்ருதி, பராசர ஸ்ம்ருதி என்று பல ஸ்ம்ருதி நூல்கள் உள்ளன.

இவற்றைத் தொடர்ந்து இதிஹாஸம் என்ற சாஸ்திரம் உள்ளது. இதிஹாஸம் என்ற சொல் ' इति ह आस ' ( இதி ஹ ஆஸ ) 'இவ்விதம் நடந்தது' என்ற பொருளை உடையது. நடந்த சம்பவத்தை மையமாகக் கொண்டு கவியால் அமைக்கப்பட்ட காவியமே இதிஹாஸம். வால்மீகியின் ராமாயணமும், வ்யாஸரின் மஹாபாரதமும் நம்மிடமுள்ள இரண்டு இதிஹாஸங்கள். இவைகளும் வேதத்தின் கருத்தை விளக்கவே தோன்றின.

வேதத்தின் பொருளை விளக்க அடுத்துத் தோன்றிய நூல்கள் புராணங்கள். पुरा अपि नवं पुराणं (புரா அபி நவம் புராணம் ). இவற்றில் கண்டுள்ள உண்மைகள் அந்நாளிலும் இந்நாளிலும் புதுமை பொலிவுடன் திகழ்வதால் புராணம் எனப்படுகிறது. வ்யாஸ பகவான் எழுதிய 18 புராணங்கள்

நம்மிடம் உள்ளன. புராணத்தில் வரும் கதைகள் கற்பனையாக இருக்கலாம். ஆனால் கருத்தோ வேதத்தின் ஸாரம். ஆகவே இதிஹாஸம் புராணம் இவைகளையும் ஸ்ம்ருதிகள் என்று அழைக்கலாம்.

இனி வேதத்தில் என்ன பேசப்படுகிறது என்ற சிந்தனைக்கு வருவோம்.

## வேதத்தின் ஸாரம்

வேதம் ஒரு சாஸ்திரமாக இருப்பினும் வேதம் பேசுகின்ற கருத்தின் அடிப்படையில் இரண்டு பிரிவாக்கப்படுகிறது. அவை (1) கர்ம காண்டம் (2) ஞான காண்டம்.

**(1) கர்ம காண்டம் :-**

வேதத்தில் அமைந்துள்ள முதல் பகுதியே கர்ம காண்டம் என அழைக்கப்படுகிறது. இது விதவிதமான யாகத்தையும், நம் கடமைகள் முதலியவற்றைப் பற்றியும் பேசுகிறது. நாம் எப்படிப்பட்ட முறையில் வாழ வேண்டும் என போதிக்கிறது. ஆகவே கர்ம காண்டத்தை தர்ம சாஸ்திரம் என அழைக்கலாம்.

**(2) ஞான காண்டம் :-**

வேதத்தில் அமைந்துள்ள இறுதிப்பகுதியே ஞான காண்டம் என அழைக்கப்படுகிறது. அந்தம் என்றால் முடிவு, அல்லது கடைசி வேதத்தின் கடைசியில் அமைவதால் ஞான காண்டம், வேதாந்தம் எனக் கூறப்படுகிறது. இந்த ஞான காண்டத்திற்கு உபநிஷத் என்று மற்றொரு பெயர் உண்டு. இப்பகுதியில் தான் ஜீவாத்மா, ஈஸ்வரன், உலகம் இவைகளின் தத்துவம் பேசப்படுகிறது. இப்பகுதியிலிருந்து அடையப்படும் அறிவே ஒருவனை நிறைமனிதன் ஆக்குகிறது.

# III சாமான்ய - விசேஷ தர்மங்கள்.

கர்மகாண்டம் என்பது தர்ம சாஸ்திரம் தான் என கூறப்பட்டது. அந்த தர்மத்தைப் பற்றி முதலில் விளக்கமாகப் பார்ப்போம். இங்கு தர்மம் என்ற சொல்லிற்குப் பொருள் நாம் வாழவேண்டிய முறை என்பது, நம் கடமைகளும் தர்மம் என்ற சொல்லில் அடங்கும்.

நம் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய நெறியே தர்மம். இந்த தர்மம் இரண்டு வகைப்படும் :-

(1) சாமான்ய தர்மம்

(2) விசேஷ தர்மம்.

1) சர்மான்ய தர்மம் என்பது மனிதனுக்கு மனிதன், இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் மாறுபடாமல் இருக்கும் நெறி.

உதாரணமாக ஸத்யம் பேசுதல், ஹிம்சை செய்யாதிருத்தல், திருடாதிருத்தல் முதலியன. இப்படிப்பட்ட பண்புகள் எல்லா மனிதர்களும், எல்லா இடத்திலும், எல்லாக் காலத்திலும் பின்பற்ற வேண்டும்.

கீழ்க்கண்ட சுலோகம், எது சாமான்யமான, அதாவது பொதுவான தர்மம் என்பதை எளிதாக விளக்குகிறது :

श्रूयतां धर्मसर्वस्वं श्रुत्वा च अवधार्यताम् ।
आत्मन : प्रतिकूलानि परेषां न समाचरेत् ॥

ச்ருயதாம் தர்மஸர்வஸ்வம் ச்ருத்வா ச அவதார்யதாம் ।
ஆத்மன : ப்ரதிகூலானி பரேஷாம் ந ஸமாசரேத் ॥

'தர்மங்களில் மேலானது கேட்கப்படட்டும். கேட்டு மனதில் நன்கு பதியவைக்கப் படட்டும். தனக்கு எது உகந்தது ஆகாதோ அதை மற்றவர்களுக்குச் செய்யக் கூடாது.'

இந்த சுலோகத்தில் எது ஸாமான்ய தர்மம் என மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. எதை நான் விரும்ப மாட்டேனோ அதை மற்றவர்களும் விரும்ப மாட்டார்கள். ஆகவே எனக்கு எது தகாதோ அது மற்றவர்களுக்கும் தகாது என அறிந்து, அவற்றைத் தவிர்க்க வேண்டும்.

உதாரணமாக என்னிடம் யாரும் பொய் சொல்லக்கூடாது என விரும்புகிறேன். ஆகவே நான் மற்றவர்களிடம் பொய் சொல்லக்கூடாது. என்னுடைய பொருளை மற்றவர்கள் அபகரிக்கக் கூடாது என விரும்புகிறேன். ஆகவே, நான் மற்றவர்களுடைய பொருளை அபகரிக்கக் கூடாது. எனக்கு ஹிம்சை வேண்டாம் எனில், மற்றவர்களுக்கும் அதுவே. ஆகவே நம் வாழ்வு பொதுவாக எப்படி அமைய வேண்டும் என்றால், என்னையே அளவு கோலாக வைத்து எனக்கு ஆகாததை மற்றவர்களுக்கும் ஆகாது என உணர்ந்து செயல்பட வேண்டும். இதுவே சாமான்யமான தர்மம்.

2) விசேஷ தர்மம் என்பது எது காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம், மனிதனுக்கு மனிதன் மாறுபடுமோ, அந்த நெறி.

விசேஷ தர்மத்தையே சாஸ்திரம் 'ஸ்வதர்மம்' அதாவது 'கடமை' என்று அழைக்கிறது.

இந்த விசேஷ தர்மம் வர்ண - ஆச்ரம அடிப்படையில் அமையும். வர்ணம் என்பது ப்ராஹ்மணன் முதலிய நான்குவித ஜாதி, ஆச்ரமம் என்பது ப்ரஹ்மசர்ய, க்ருஹஸ்த முதலிய நான்கு ஆச்ரமங்கள்.

வர்ண ஆச்ரம அடிப்படையில் செய்ய வேண்டிய கடமைகளே விசேஷ தர்மங்கள். ஒரு வர்ணத்தில் இருப்பவர் கடமை வேறு, மற்ற வர்ணத்தில் இருப்பவர் கடமை வேறு. அதுபோல் ஆச்ரமத்திலும். இனி வர்ண - ஆச்ரமத்தைப் பற்றிப் பார்ப்போம்.

1) வர்ண தர்மம் -

(i) ப்ராஹ்மணன் (ii) க்ஷத்திரியன் (iii) வைச்யன் (iv) சூத்ரன் என சமுதாயத்தில் அமைக்கப்பட்டுள்ள பிரிவுகள். இக்காலத்தில் தெளிவாக இந்த பிரிவுபடி இயக்கம் இல்லை எனினும், இந்த நான்கு வித மக்கள் செய்யும் செயல், இவர்களின் குணங்களை உடைய மனிதர்கள் இன்றும், என்றும் இருந்து வருவார்கள். சுருக்கமாக ஒவ்வொரு வர்ணத்தார் செய்யும் செயலைப் பார்ப்போம்.

**(i) ப்ராஹ்மணன் :-**

ப்ராஹ்மணன் இப்படிப்பட்ட செயலில் ஈடுபடுவான், இப்படிப்பட்ட குணத்துடன் இருப்பான் என்று கூறுவதை விட, இப்படிப்பட்ட குணத்தைப் பின்பற்றிச் செயலில் இருப்பவன் ப்ராஹ்மணன் என்று கூறலாம். இவ்விதம் கூறும் பொழுது பிறப்பின் அடிப்படையில் வர்ணத்தைத் தீர்மானிக்காமல் செயல், குணம் இவைகளின் அடிப்படையில் தீர்மானிப்பதாகிறது.

ஆகவே யார் தர்ம நெறியை போதித்தல், வேதம் படித்தல், மற்றவர்களுக்குப் புகட்டுதல், எளிமையான வாழ்க்கை, முதலிய குணங்களுடன் இருக்கிறார்களோ அவர்கள் ப்ராஹ்மணர்கள்.

**(ii) க்ஷத்திரியன் :-**

நாட்டைக் காக்கும் செயலில் ஈடுபட்டுள்ளவர்கள், சமுதாய சேவை செய்பவர்கள் இந்தப் பகுதியைச் சேர்வார்கள்.

**(iii) வைச்யன் :-**

வியாபாரம், விவசாயம் செய்தல், முதலிய செயலில் ஈடுபட்டுள்ளவர்கள்.

**(iv) சூத்ரன் :-**

மற்ற மூன்று வர்ணங்களுக்கும் பணிவிடை செய்பவர்கள். இவ்விதமான வர்ண பேதம் சமுதாய செயல்பாட்டிற்கு அவசியம் தேவை. இங்கு நாம் பிறப்பின் அடிப்படையில் பிரிக்காது செயல், குணம் இவைகளின் அடிப்படையில் பார்க்கிறோம்.

ஆச்ரமம் என்பது ஒரு தனிப்பட்ட மனிதனின்

வளர்ச்சிக்காக அமைக்கப்பட்டது. ஒரு மனிதனின் வாழ்வு நான்கு படிகளாகப் பிரிக்கப்படுகிறது. அவைகள் (1) ப்ரஹ்மசர்ய ஆச்ரமம் (2) க்ருஹஸ்த ஆச்ரமம் (3) வானப்ரஸ்த ஆச்ரமம் (4) ஸந்யாஸ ஆச்ரமம்.

1) ப்ரஹ்மசர்ய ஆச்ரமம் :-

வாழ்வின் ஆரம்பப்பகுதி, மாணவ பருவம். இந்தப் பருவத்தில் ஒரே ஒரு கடமை - அது படித்தல். கல்வியை அடைவதற்கு ஏற்ற ஒழுக்கத்தைப் பின்பற்றுதல் முக்கிய கடமை ஆகிறது. குருவிற்குப் பணிவிடை செய்தல், எளிமையாக வாழ்தல், அரசியலில் ஈடுபடாதிருத்தல், போன்றவைகளைப் பின்பற்ற வேண்டும்.

2) க்ருஹஸ்த ஆச்ரமம் :-

இல்லற வாழ்க்கையே இந்த ஆச்ரமம். இந்த வாழ்க்கை கர்மயோகத்திற்கு உகந்தது. இல்லற வாழ்க்கையில் இருப்பவன் சமுதாயத்தின் ஊன்றுகோலாக விளங்குகிறான். நல்ல சமுதாயத்தை உருவாக்குவது இல்லறத்தில் உள்ளோர் கடமை. கீதையில் பகவான் இல்லறத்தில் உள்ளோர்களுக்கு யக்ஞம், தானம், தபம் என்று மூன்று கடமைகளைப் கூறுகிறார். குறிப்பாக யக்ஞம், தானம் இல்லறத்தைச் சார்ந்தோரின் கடமை. யக்ஞம் என்றால் இறை வழிபாடு அல்லது வாழ்க்கை முறை என பொருள் கொள்ளலாம். வேதமானது ஐந்து விதமான யக்ஞங்களைக் கூறுகிறது. அவைகள் பஞ்சமஹாயக்ஞங்கள் (**पञ्च महा यज्ञ :**) என

அழைக்கப்படுகின்றன.

**i)** தேவ யக்ஞம் :- (देव यज्ञ :)

இறைவனை வழிபடுதல். ஒவ்வொரு நாளும் இறைவணக்கத்துடன் துவங்கப்பட வேண்டும். அவரவருக்குத் தெரிந்த விதத்தில், அவரவர் இஷ்டதெய்வத்தை பூஜை செய்தல், அல்லது வழிபாடு செய்தல்.

**ii)** ரிஷி யக்ஞம் :- (ऋषि यज्ञ :)

ரிஷிகள் எழுதிய நூல்களை படித்தல். நம்மிடம் நல்ல நூல்கள் அதிகமாகவே உள்ளன. வேதம், இதிஹாஸம், புராணம் போன்ற நூல்களைப் படித்தல், அதைக் காப்பாற்றி வருதலே ரிஷிகளுக்குச் செய்யும் வழிபாடு.

**iii)** பித்ரு யக்ஞம் :- (पितृयज्ञ :)

முன்னோர்களுக்குச் செய்யும் வழிபாடு. இன்று நாம் இப்படி இருக்கிறோம் என்றால், அது நம் முன்னோர்கள் வாழ்ந்த விதத்தின் பலன். ஆகவே அவர்களுக்காகச் செய்யும் தர்ப்பணம் முதலிய கடமை.

**iv)** மனுஷ்ய யக்ஞம் :- ( मनुष्य यज्ञ :)

மனித குலத்திற்கு நாம் செய்யும் உதவி. விருந்தினர்களுக்கு உணவு கொடுத்தல். சமூக சேவை செய்தல், நம்மிடம் அதிகமாக உள்ளவற்றை மற்ற மனிதர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தல்.

v) பூத யக்ஞம் :- (भूत यज्ञ :)

மற்ற உயிரினங்களுக்குச் செய்ய வேண்டிய கடமை. மற்ற உயிரினங்களிடம் இருந்து பயனைப் பெறுகின்ற மனிதன் அவைகளைக் காப்பது கடமை ஆகிறது.

இவ்விதம் தானம், யக்ஞம் என்பது இல்லறத்தோர்களது முழுநேரக் கடமை. இல்லறத்தில் இருக்கும் பொழுதே சிறிது காலம், அல்லது சிறிய அளவில் தவத்தை மேற்கொண்டு பழக வேண்டும். எல்லாக் காலத்திலும் போகத்தில் ஈடுபடக்கூடாது. ஒரு காலத்தில் போகத்திலிருந்து ஒருவன் விடுபட வேண்டி வரும். ஆகவே அதற்குத் தயாராக இருக்க வேண்டும்.

3) வானப்ரஸ்த ஆச்ரமம் :-

இல்லறத்திலேயே இருந்து மடிவது மனிதனின் முடிவு அன்று. இல்லறம் என்பது பயணத்தில் ஒரு பகுதி. பொறுப்புகளை அடுத்த தலைமுறையிடம் விட்டுவிட்டு நம் மனதைக் கடவுள் சிந்தனையில் வைத்துப் பழகும் வாழ்க்கை முறை வானப்ரஸ்த ஆச்ரமம். இந்த ஆச்ரமத்தின் ஒரே கடமை தவம். மற்ற கடமைகளை விட்டு விட்டு முழுநேரமும் இந்திரிய, மன அடக்கம் பயிலுதல் தவம். போகத்தைத் துறந்து நம் மனதை ஜபத்தில் ஈடுபடுத்த வேண்டும். இந்தக் காலத்தில் செய்யப்படும் சாதனை அடுத்த ஆச்ரமமான ஸந்யாஸ ஆச்ரமத்திற்குத் தகுதிப்படுத்தும்.

4) ஸந்யாஸ ஆச்ரமம் :-

ப்ரஹ்மசர்யத்தில் தர்ம அதர்ம ஞானத்தை அடைந்து, இல்லறத்தில் தர்மவாழ்க்கை வாழ்ந்து மனத்தூய்மையை அடைந்து வானப்ரஸ்த ஆச்ரமத்தில் மன ஒருமுகப்பாட்டை அடைந்து, ஸந்யாஸ ஆச்ரமத்தில் சாஸ்திர விசாரம் செய்து ஞானத்தை அடைந்து ஒருவன் வாழ்க்கைப் பயணத்தை முடிக்கிறான். ஆகவே ஸந்யாஸ ஆச்ரமம் வேதாந்த விசாரத்திற்காக, அல்லது ஞானயோகம் என்ற சாதனைக்காக அமைக்கப்பட்டுள்ளது.

வேதாந்த சாஸ்திரம் என்ன கூறுகிறது எனக் கேட்டால், சந்தேகம் அறப் புரிந்து கொள்ளுதல், அடைந்த ஞானத்தில் நிலைபெறுதல், இதுவே ஸந்யாஸ ஆச்ரமத்தின் கடமை.

இவ்விதம் விசேஷ தர்மம் வர்ணம் - ஆச்ரமம் என்று இரண்டு அடிப்படையில் பிரிக்கப்படுகிறது. தற்காலத்தில் 4 - வர்ணங்கள், 4 - ஆச்ரமங்கள் எனப் பிரிவு தெளிவாக இல்லை எனினும், இந்த முறைப்படியே வாழ்க்கை உள்ளது. இன்று மாணவ பருவம், குடும்பத்தை உடையவன், வேலையிலிருந்து ஓய்வு பெற்றவன் என ஆச்ரமத்தின் முறையே இருந்து வருகிறது.

விசேஷ தர்மம் காலத்திற்குக் காலம் மாறும் என்று பார்த்தோம். ஸாமான்ய தர்மம் பொதுவானது. ஒருக்கால் விசேஷ தர்மத்துடன் சாமான்ய தர்மம் முரண்பட்டால், ஒருவன் விசேஷ தர்மத்தையே பின்பற்ற வேண்டும். உதாரணமாக - அஹிம்சை பொதுவான தர்மம். க்ஷத்திரியனின் தர்மம் நாட்டைக் காத்தல். ஆகவே நாட்டைக் காக்க க்ஷத்திரியன் தர்ம யுத்தம் செய்தல் முதலிய கர்மத்தில் ஈடுபடுதல் தவறில்லை.

# IV கர்மயோகம்

வீடுபேறு அல்லது மோக்ஷத்தை அடைதல் ஒருவனின் முடிவான லக்ஷ்யம். அந்த மோக்ஷம் என்பது இறைவனைப் பற்றிய அறிவு. அந்த அறிவு நமக்கு வர வேண்டும். தூய்மையான மனம் தான் இறைவனைப் பற்றிய அறிவை அடைய தகுதி உடையது. மனத்தூய்மை என்பது விருப்பு வெறுப்பு அற்ற மனம். அப்படிப்பட்ட மனத் தூய்மையைக் கொடுப்பதே கர்மயோகம்.

கர்மயோகம் என்ற சாதனையை ஒருவன் செய்யும் பொழுது அவன் மனதில் விருப்பு வெறுப்பு நீங்க நீங்க, அறிவுத் திறன் வெளிப்படுகிறது. அந்த அறிவு எது உண்மை எது உண்மை அல்ல என்று காட்டும். உண்மையை நோக்கிச் செல்ல, பொய்மையை விட்டு விலக, இந்த அறிவு காரணம். இவ்வறிவு நம்மிடம் இருந்து வெளிப்பட மனத்தூய்மை தேவை. மனத்தூய்மை அடையக் கர்ம யோகம் சாதனை. ஆக, கர்மயோகம் என்பது மோக்ஷம் என்ற முடிவின் முதல் படி.

கர்மயோகம் என்ற கூட்டுச் சொல்லில் யோகம் என்ற சொல்லிற்கு ஸாதனம் என்று பொருள். கர்மம் - என்பது வேதத்தில் கூறப்பட்டுள்ள விதவிதமான கர்மங்கள். அதாவது நாம் பார்த்த ஸாமான்ய, விசேஷ தர்மங்கள் முதலியன.

ஒருவன் கடமைகளை எதிர்பார்ப்புடன் செய்தால் புண்ணியம் கிடைக்கும். கடமைகளைச் செய்யாவிட்டால் பாபம் வரும். பலனை எதிர்பார்க்காமல் செய்தால் மனது தூய்மை

கிடைக்கும். ஆகவே கர்மத்தை கர்மயோகமாகச் செய்வதின் பலன் மோக்ஷத்திற்கு நம்மைத் தகுதியாக்குதல். பொதுவாக கர்மம் ஒரு மனிதனைப் பந்தப்படுத்துகிறது. அந்தப் பந்தப்படுத்தும் இயல்பை உடைய கர்மத்தையே சாதனமாக்குதல் கர்மயோகம். முள்ளை முள்ளால் களைவதுபோல். கர்மத்தின் தன்மையை கீழ்க்கண்ட சுலோகம் விளக்குகிறது.

कर्मणा बध्यते जन्तु : विद्यया च विमुच्यते ।
तस्मात् कर्म न कुर्वन्ति यतय : पारदर्शिन : ॥

கர்மணா பத்யதே ஜந்து : வித்யயா ச விமுச்யதே ।
தஸ்மாத் கர்ம ந குர்வந்தி யதய : பாரதர்சின : ॥

கர்மத்தால் (= செயலால்) மனிதன் பந்தப்படுகிறான். அறிவால் விடுதலையடைகிறான். ஆகவே மோக்ஷத்தை நோக்கி முயல்பவர்கள் கர்மத்தைச் செய்வதில்லை.

எவ்விதம் கர்மம் நம்மைப் பந்தப்படுத்துகிறது எனில் - நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் புண்ணியம் அல்லது பாபம் என்ற பலனைக் கொடுக்கும். புண்ணிய பாபம், இன்பதுன்பமாக மாறுபடும். ஆகவே இன்பதுன்பத்தை அனுபவிக்க அதற்கேற்ப உடல் வருகிறது. அந்த உடலைக் கொண்டு மீண்டும் கர்மம் - பின் பலன் - இவ்விதம் கர்மம், பிறவிச் சக்கரத்தில் சுற்ற வைக்கிறது. இப்படிப்பட்ட கர்மத்தை ஸாதனையாக மாற்றுதலே கர்மயோகம் என்று அழைக்கப்படுகிறது.

கர்ம யோக லக்ஷணம் :-

கர்மயோகம் செய்தல் என்றால் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்தல் அன்று. நாம் அன்றாடம் செய்து வரும் செயல்களிலேயே வைக்கின்ற சரியான பாவனை. நம் செயலை, அதாவது கர்மத்தை கர்மயோகமாக்குவது நம் புத்தி = பாவனை. ஆகவே கர்மயோகத்திற்கு புத்தியோகம் என்றும் பெயர். இனி எப்படிப்பட்ட செயல்கள் நம்மால் செய்யப்பட்டு வருகின்றன. அதில் எப்படிப்பட்ட பாவனை இருக்க வேண்டும் என்று பார்ப்போம்.

**I.** கடமை : நம் கடமைகளை விசேஷ தர்மங்கள் என்று பார்த்தோம். ஸாமான்ய தர்மங்களும் மனிதர்களான நமது கடமை, நம் கடமையில் எப்படிப்பட்ட பாவனை இருக்க வேண்டும் எனில் 3 விதமான பாவனை நம் கடமையை கர்மயோகமாக்குகிறது.

i) நம் கடமைகளை விருப்பு வெறுப்பு இன்றிச் செய்ய வேண்டும். சில கடமைகளைச் செய்ய விருப்பம் இருக்கலாம். சில கடமைகளைச் செய்ய நமக்கு விருப்பம் இல்லாது போகலாம். ஆனால் கர்மயோகம் என்பது எது நம் கடமையாக வந்துள்ளதோ அதை செய்துதான் ஆகவேண்டும். உடலைப்பாதுகாக்க உண்ணுதல் கடமை. நோய் வரும் பொழுது மருந்தை உட்கொள்ளுதல் கடமை. வெறுப்புக் காட்டாது மருந்தையும் உட்கொள்ளுதல் கடமை. வயதானவர்களைப் பாதுகாத்தல் முதலிய கடமை எதுவாகிலும் நாம் அதைச் செய்தே தீர வேண்டும்.

ii) நம் கடமையில் இருக்க வேண்டிய இரண்டாவது பாவனை என்னவென்றால் நம் கடமையிலிருந்து உரிமையை எதிர்பார்க்கக்கூடாது. நம் கடமையைச் செய்யும் பொழுது அதனால் பயன் அடைந்தவர்களிடம் நாம் உரிமையை எதிர்பார்க்கக் கூடாது. அவ்விதம் எதிர்பார்த்து கடமையைச் செய்தல் கர்மயோகம் ஆகாது. உதாரணமாகத் தந்தை மகனை வளர்ப்பது கடமை. பிற்காலத்தில் மகன் நன்றி உணர்வுடன் தந்தையைப் பாதுகாப்பது மகனின் கடமை. அது தந்தையின் உரிமை. உரிமை தனக்கு கிட்டுமா என எதிர்பார்த்து தந்தை கடமையைச் செய்யக்கூடாது. உரிமையை இறைவன் பார்த்துக் கொள்வான். நாம், நம் கடமையைச் செய்ய வேண்டும். அதனால் பயன் அடைந்தவர்கள், செய்ய வேண்டியதும் செய்யாததும் அவர்கள் மனதைப் பொருத்தது. ஆகவே உரிமையைப் பொருட்படுத்தாது கடமையை மட்டும் செய்தல் கர்மயோகம். உண்மையில் அவரவர்கள் கடமையைச் செய்தால் உரிமை தானாக கிடைத்து விடும். ஒரு நல்ல சமுதாய அமைப்பு என்பது கடமையுணர்வுடன் மக்கள் செயல்படுதல். ஆகவே கர்மயோகம் நல்ல சமுதாயத்தை அமைக்கவும் தேவை.

iii) கடமைகளில் நமக்கு இருக்க வேண்டிய மூன்றாவது பாவனை - கடமையே பூஜையாகக் கருதுதல் - கடமையைச் செய்தலைக் கடவுள் வழிபாடாகப் பாவித்தல். இறைவனுக்காக என்கடமையைச் செய்கின்றேன் என்று நம் செயலையே இறைவணக்கமாக்குதல்.

இம்மூன்றாவது பாவனை. இது எப்படி முடியும் என்றால் ஒரு உதாரணம் பார்ப்போம்.

ஒருவரது வீட்டில் டிரைவர் வேலை பார்த்து வந்தவருக்கு ஒரு சமயம் மஹாத்மா காந்தியை ரயில் நிலையத்திலிருந்து தன் முதலாளி வீட்டுக்கு அழைத்து வர வாய்ப்பு அமைந்தது. அவ்விதம் அவர் செய்தார். பிறகு பார்ப்பவரிடம் எல்லாம் 'நான் மஹாத்மா காந்திக்கு கார் ஓட்டினேன்' என மகிழ்ச்சியுடன் கூறிக்கொண்டே இருந்தார். இங்கு இந்த டிரைவர் எப்பொழுதும் கார் ஓட்டிக் கொண்டு தான் இருக்கிறார். ஒரு உத்தமருக்காக அந்தப் பணியைச் செய்யும் பொழுது எவ்வளவு மகிழ்ச்சி ! அதுபோல் நம் கடமையை இறைவனுக்காகச் செய்கிறேன் என்ற உணர்வுடன் செய்தலே மனநிறைவு.

ஆகவே கடமை என்ற செயலை எப்படிப்பட்ட பாவனையுடன் செய்தால் அது கர்மயோகம் என்று பார்த்தோம்.

## II காம்ய கர்ம (काम्य कर्म) :-

ஆசையின் தூண்டுதலால் நாம் பல செயல்கள் செய்து வருகிறோம். அது காம்ய கர்ம என அழைக்கப்படுகிறது. ஆரம்ப நிலையில் சாதகனால் இக்கர்மத்தை விடமுடியாது. ஆகவே இதுபோன்ற செயலில் ஈடுபட்டாலும், அந்தச் செயலின் பலனை ஈஸ்வர ப்ரஸாதமாகப் பாவிக்க வேண்டும். 'என் முயற்சியால் வரவில்லை. இறைவன் அருளால் நான் சுகத்தை அனுபவிக்கிறேன்' என்ற பாவனையை மேற்கொண்டு, பக்குவம்

வரவர இதுபோன்ற செயலைக் குறைக்க வேண்டும். தர்மத்திற்கு எதிராக எந்த போகத்தையும் ஸாதகன் நாடக் கூடாது. மனம் தூய்மை அடைய அடைய இக்கர்மங்கள் குறைந்து வரும்.

## III ப்ராயச்சித்த கர்மம் :

வேதத்தின் சில விரதங்கள், வழிபாடுகள் கூறப்பட்டுள்ளன. அவைகளைச் செய்வதன் மூலம் நாம் செய்த பாபபலன் குறைந்து துன்பத்திலிருந்து விடுபட உதவியாக இருக்கும். சாதகன் ப்ராயச்சித்த கர்மத்தை விட்டு விடுதல் உகந்தது. நாம் செய்த செயலின் விளைவு எதுவாகிலும் நான் ஏற்று கொண்டு துன்பத்தின் மூலம் பக்குவம் அடைகிறேன் என்ற பாவனையில் இருக்க வேண்டும். சிலர் சிறிய துயரம் வந்தால் பரிகாரத்திற்காக ஜாதகத்தை எடுத்துக்கொண்டு அலைவார்கள். கர்மயோகி துன்பத்தை இறைவன் என்னைப் பக்குவப் படுத்தும் சாதனம் எனப் பாவித்து, இது போன்ற பரிகார செயலில் ஈடுபடக்கூடாது.

## IV நிஷித்த கர்மம் :

வேதத்தில் சில செயல்கள் செய்யக்கூடாது எனக் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக மது அருந்துதல் முதலியன. இது போன்ற செயலைக் கர்மயோகி கண்டிப்பாக விட்டு விட வேண்டும்.

**கர்மயோகத்தின் சிறப்பு :**

நாம் காம்யமான மனதுடன் யாகங்கள், பாராயணம் முதலிய கர்மங்களைச் செய்யும் பொழுது அவைகள் தவறாகச்

செய்யப்பட்டால் ப்ரத்யவாய தோஷம் என்கின்ற பாவம் வரும். ஆனால் கர்மயோகத்தில் நம் பூஜையில் விதிமுறைகளில் தவறு இருப்பினும் பாவம் வராது. ஆகவே எவ்வித பயமும் இன்றி நாம் இறை வழிபாட்டை மேற்கொள்ள வேண்டும்.

ஆகவே கர்ம யோகத்தில் தோல்வி என்பது கிடையாது. இப்படிப்பட்ட சாதனையை மேற்கொள்ளும் பொழுது அடையும் பலன் மனத்தூய்மை. மனத்தூய்மை என்றால் விருப்பு, வெறுப்பு நீங்கிய மனம் அல்லது விவேகம் வைராக்யம் ஆத்மநாட்டம் முதலிய குணங்களை அடைதல்.

# V உபாஸனம் उपासनम्

மனதிற்கு இரண்டுவித குறைபாடுகள் உள்ளன.

1) அசுத்தி - மன அழுக்கு. அதாவது விருப்பு, வெறுப்பு, பொறாமை, பயம், லோபம் போன்ற குணங்கள்.

2) விக்ஷேபம் - அலைபாய்தல். ஒரு குறிப்பிட்ட செயலில் மனம் தொடர்ந்து சீராகச் செயல்படாது திரிதல்.

இதில் முதல் குறையானது கர்மயோகம் என்ற ஸாதனையில் நீங்கும். இரண்டாவதான விக்ஷேபத்தை நீக்கவே உபாஸனம் என்ற ஸாதனை. இந்த ஸாதனையின் மூலம் மனதிற்கு ஒருமுகப்பாடு கிடைக்கிறது. உபாஸனத்தையே த்யானம் என்றும் கூறுகின்றோம்.

உபாஸனம் என்ற சொல்லில் இரண்டு அம்சங்கள் உள்ளன.

1) உப -அருகில் 2) ஆஸனம் - அமர்தல் அல்லது தடையின்றி இருத்தல். ஆக உபாஸனம் என்றால் இறைவனிடத்தில் மனதைத் தடையின்றி வைத்தல் என்று இறுதியாகப் பொருள்படும்.

உபாஸனத்திற்கு இலக்கணம் (ஸகுண ப்ரஹ்ம)

सगुणब्रह्म - ध्यानरुप - मानसव्यापार : ।

த்யானரூப - மானஸவ்யாபார :)' குணங்களுடன் கூடிய இறைவனை த்யானித்தல் என்ற மனதின் செயல்.

உபாஸனம் என்ற ஸாதனம் கர்மயோகத்தைப் போன்ற ஒருவிதமான பாவனை அல்ல. கர்மயோகமானது நாம் அன்றாடம் செய்துவரும் கடமைகளில் காட்டவேண்டிய சரியான பாவனை.

கர்மயோகம் செய்யத் தனிப்பட்ட காலம் ஒதுக்க வேண்டாம். ஆனால் உபாஸனை அவ்விதம் அல்ல. இந்த ஸாதனையைச் செய்ய குறிப்பிட்ட காலத்தை ஒதுக்க வேண்டும். ஆகவே தான் வானப்ரஸ்த ஆச்ரமம் உபாஸனை செய்யத் தகுந்தது. அவர்கள் முழுநேரம் உபாஸனையில் ஈடுபட முடியும். இல்லறத்தில் இருப்போர் கடமைகளைச் செய்தும் எப்படியாவது நேரத்தைச் சேமித்து இந்த ஸாதனையில் ஈடுபடுதல் வேண்டும்.

உபாஸனை என்பது மனதை முறைப்படுத்துதல் அல்லது நம் கட்டுக்குள் கொண்டு வருதல். மனமானது அவ்வளவு சுலபத்தில் கட்டுக்குள் வராது. அது மிகவும் சூக்ஷ்மமானது. மனதைப் பிடிக்க நாம் படிப்படியாகப் பல முன்னேற்பாடுகளுடன் செயல்படவேண்டும். மனம் என்பது ஒரு கருவி. அதை நாம் பயன்படுத்த வேண்டும் என்றால் அது நம்முடைய பணியாளாகவே இருக்க வேண்டும். ஆகவே மனதைக் கட்டுபடுத்துதல் என்கின்ற சாதனையில் வெற்றி அடைய வேண்டும் என்றால் சில முன்னேற்பாடுகள் செய்ய வேண்டும். படிப்படியாகத்தான் மனதை நாம் நம் வசத்திற்குள் கொண்டு வர முடியும்.

**உபாஸனைக்கான நிபந்தனைகள் :**

உபாஸனம் அல்லது த்யானம் என்ற ஸாதனை கைகூட வேண்டுமானால் சில படிகள் உள்ளன. அவைகளை முதலில் பார்ப்போம். நாம் அரை மணிநேரம் தியானம் செய்ய அமர்ந்து

அந்த நேரத்தில் எந்த விதத்தில் அந்த ஸாதனை அமைகிறது என்பது, நாம் 23 1/2 மணி நேரத்தில் நம் வாழ்க்கையை எப்படி அமைத்தோம் என்பதைப் பொருத்தது. ஆகவே உபாஸனை செய்ய நம் வாழ்க்கை முழுதும் முறையாக அமைய வேண்டும்.

நம் உடல், ப்ராணன், மனம், புத்தி இவைகளிடத்தில் சமமான நிலையை ஏற்படுத்துவதே தியானத்திற்கான நிபந்தனை. நம் உடல் நிலையில் ஸமத்துவம் என்பது நாம் செய்யும் செயல்களில் சமமான தன்மை. நம் உடலுக்குச் சக்திக்கு மீறிய உழைப்பு கொடுக்ககூடாது. அதே சமயம் உடல் உழைப்பு இல்லாமலும் இருக்கக்கூடாது. சமமாக உழைப்பு அமைய வேண்டும். அதுபோல் ஓய்வு - அதிக ஓய்வோ குறைவான ஓய்வோ உடலுக்குக் கொடுக்கக்கூடாது. உறக்கமும் அதிகமோ குறைவோ உகந்ததன்று. ஆகவே உடல் நிலையில் உழைப்பு, ஓய்வு, உறக்கம் முதலியன நாள் முழுதும் சமமான நிலையில் வைத்துப் பழகவேண்டும்.

அடுத்து உணவு விஷயத்திலும் இம்முறையே கையாளவேண்டும். அதிகம் அல்லது குறைவான உணவு த்யானத்திற்குத் தடை.

அடுத்த கவனம் நம்முடைய புலன்களின் செயல்பாட்டை நோக்கிச் செல்ல வேண்டும். கண், காது, வாய், முதலிய புலன்களால் போகப் பொருட்களையே நுகர்ந்து வந்தால் த்யானம் தடைப்படும். ஆகவே தேவையற்ற மன சஞ்சலத்தை உண்டு

செய்கின்ற பொருள்களைப் பார்க்காது, கேட்காது, சொல்லாது இருப்பின், த்யானம் நன்கு கைகூடும். பேச்சைக் குறைக்கக் குறைக்க மன அமைதி அதிகரிக்கும். ஆகவே புலனடக்கம், மௌனம் முதலிய ஸாதனைகள் த்யானத்திற்கு இன்றியமையாத நிபந்தனைகள்.

மனதளவில் அதிக இன்பம், அதிக துயரம் வெறுப்பு, பயம் முதலிய உணர்வுகள் இருந்தால் த்யானம் செய்ய முடியாது. நம்முடைய உணர்வுகளையும் (emotions) சமப்படுத்த வேண்டும். இன்பதுன்பமான சூழ்நிலைகளைத் தவிர்க்க முடியாது. ஆனால் அந்த சூழ்நிலைகள் அதிகம் பாதிக்காத வண்ணம் மனதைப் பாதுகாக்க வேண்டும். இவ்விதம் பாதிக்கும் சூழ்நிலைகளையும் முடிந்தால் தவிர்க்கவேண்டும்.

நம் புத்தி எப்பொழுதும் தீர்மானிப்பதிலும் திட்டமிடுவதிலுமே இருக்கும். அந்த புத்திக்கும் நாம் ஓய்வு கொடுத்தல் வேண்டும். இவ்விதம் உடல், உணவு, உறக்கம், புலன்களின் செயல், மனம், புத்தி அனைத்தின் நிலைகளிலும் சமமான தன்மையை நாம் நாள் முழுதும் கடைப்பிடித்தல் த்யானத்தின் வெற்றிக்கு வழி.

**த்யான ஸ்வரூபம் :–**

தனிமையான, அமைதியான, தூய்மையான இடத்தைத் தேர்ந்தெடுத்து முடிந்தவரை தொடர்ந்து குறிப்பிட்ட காலத்தில்

அவரவர்களுக்கு ஏற்ற அமர்ந்த நிலையில் த்யான பயிற்சி செய்தல் வேண்டும். த்யானத்தில் அமர்ந்தவுடனேயே மன அமைதியையோ மன ஒருமுகப்பாட்டையோ எதிர்பார்க்கக் கூடாது. முதலில் சில காலங்கள் அசைவின்றி அமர்ந்து பழகவும், எண்ணங்களின் ஓட்டத்தை அமைதிப் படுத்தவும் பழக வேண்டும். இதுவே முதல் முறையான த்யானம். எவ்விதம் நீரின் ஓட்டத்தைக் கரையில் அமர்ந்துள்ளவன் பார்க்கின்றானோ அவ்விதம் மனதில் வரும் எண்ணங்களைத் தடைசெய்யாமல் ஸாக்ஷிபோல் பார்த்துப் பழக வேண்டும். அப்பொழுது தான் நான் வேறு மனம் வேறு என நாம் நம் மனதைப் பிரிக்கிறோம். இவ்விதம் மன ஓட்டத்தை அமைதியாக பார்த்து உடல், ப்ராணன், புலன்கள் முதலியவைகளை அமைதிப்படுத்திய பின் த்யானத்தின் அடுத்தபடியான ஜபத்திற்குச் செல்ல வேண்டும். மனதில் நாம் வழிபடும் கடவுளின் பெயரைத் தொடர்ந்து கூறுதல் ஜபம். இதுவே மிக முக்கியமான ஸாதனை. இந்த ஜபத்தின் மூலம் தான் மன ஒருமுகபாட்டை அடைய முடியும். ஆரம்பத்தில் ஜபம் செய்ய முடியவில்லை என்றால் நமக்குத் தெரிந்த ஏதாவது சுலோகத்தை மனதில் பாராயணம் செய்யலாம். பிறகு ஜபத்தைப் பயிற்சி செய்யலாம். இறைவனுடைய நாமத்தை ஜபிக்கும் பொழுது இடையிடையே மற்ற எண்ணங்கள் வந்து செல்லும். பொறுமையாக, தொடர்ந்து சில காலங்கள் பயிற்சி செய்தால், மற்ற தேவையற்ற எண்ணங்களின் தாக்குதல் குறைந்து மனம் அமைதியையும் ஒருமுகப்பாட்டையும் அடையும். இந்த

ஜபரூபமான த்யானத்தை என்றும் செய்து கொண்டிருக்க வேண்டும். பிறகு அடுத்த விதமான த்யானம் நல்ல பண்புகளை த்யானித்தல். நல்ல பண்புகளை அமைதியான மனதில் த்யானிக்கும் பொழுது அவைகள் நம்மயமாக உதவி புரிகின்றன. இவ்விதம் த்யானம் பலவகைப்படினும் ஜபம்தான் மிகவும் முக்கியம். சாஸ்திர ஞானம் வரவர இவ்வுலகம் இறைவனின் உடல் என்று அனைத்தும் ஈஸ்வரனாக த்யானித்தல் போன்ற த்யானம் செய்ய வேண்டும். ஆனால் சாதகர்கள் ஆரம்ப நிலையில் ஜபத்தையே தொடர்ந்து செய்து வர வேண்டும்.

ஆக உபாஸனம் அல்லது த்யானம் என்பது மனதை அமைதிப்படுத்த, ஒருமுகப்படுத்த மேற்கொள்ளும் ஸாதனை.

# VI ஞானயோகம்.

கர்மயோகத்தின் மூலம் மனத்தூய்மையை ஒருவன் அடைகிறான். மனத்தூய்மையின் விளைவு அறிவுத்திறன் வெளிப்படுதல். விவேகம் என்பது அறிவு. அந்த விவேகசக்தி வெளிப்படுதல் என்றால் எது உண்மை எது பொய் அதாவது எது நிலையானது, எது நிலையற்றது என்கின்ற அறிவு. இந்த அறிவால் நிலையான பொருளை அடைய விருப்பம், நிலையற்ற பொருளை அகற்ற பாவனை தோன்றும். இந்த விவேகத்தால் ஒருவன் நிலையான பொருளை அடைய முடிவு செய்கின்றான். அந்த நிலையான மெய்ப்பொருளை அடைய நேரடியான ஸாதனமே ஞானயோகம்.

நிலையான பொருளை அடைதலே மோக்ஷம் (வீடுபேறு) ஆகவே முடிவான லக்ஷ்யத்திற்கு ஸாதனை ஞானயோகம்.

ஞானயோகம் என்ற ஸாதனை மூன்று ஸாதனைகளின் ரூபமாக உள்ளது. இவை : (1) ச்ரவணம் (श्रवण) - கேட்டல் (2) மனனம் (मनन) - சிந்தித்தல் (3) நிதித்யாஸனம் (निदिध्यासन) - த்யானித்தல். இந்த மூன்றும் சேர்ந்து ஞானயோகம் என்று அழைக்கப்படுகிறது.

ஞானயோகம் என்ற சொல், ஞானத்தை ஸாதனமாக பயன்படுத்துதல் என்பது. ஞானத்தை ஸாதனமாகப் பயன்படுத்துவதால் அடையப்படுவது நித்தியமான பொருள்.

அதாவது பரம்பொருள். இந்த ஞானத்தை அடையத்தான் கேட்டல், சிந்தித்தல், த்யானித்தல் என்பவைகள் காரணமாகின்றன. ஞானயோகத்தை மேற்கொள்ளும் முன் அதன் முக்கியத்துவத்தை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் மோக்ஷத்தை அடைவதற்கும் சாஸ்திரத்தைக் கேட்பதற்கும் தொடர்பு தெளிவாகத் தெரியவில்லை. ஆகவே நிலையானதான மோக்ஷத்தை எப்படி ஞானயோகம் தரும் என முதலில் பார்ப்போம்.

மோக்ஷம் என்பது மனநிறைவு. அதாவது நிலையான நிறைவு. வெளிப்பொருளை அடைவதால் கிடைக்கும் சுகம் நிலையற்றது. நிலையான மனநிறைவை அல்லது நிலையான என்றும் உள்ள பொருளை ஒருவன் அடையவேண்டும். அந்த பொருள் காலம், இடம் முதலியவற்றால் கட்டுபடாததாகத்தான் இருக்க வேண்டும். ஆகவே எங்கும் எப்பொழுதும் உள்ள பொருளை அடைதல் மோக்ஷம். இங்கு ஒரு முரண்பாடு தோன்றலாம். எங்கும் உள்ள பொருளை நான் அடைய வேண்டும் என்பது எப்படி? அதுதானே என்றும், எங்கும், இங்கும் உள்ளது. இந்த இடத்தில் நம் பதில் - நாம் ஒரு பொருளை அடைந்திருந்தும் அறியாமையால் இழக்க நேரிடலாம். ஒரு பொருள் இருந்தும் அறியாமையால் இழந்தால் அந்தப் பொருளை அடைதல் என்பது ஞானத்தால் தான். உதாரணமாக நமக்குத் தெரிந்த ஒரு கதை - பத்து மனிதர்கள் ஆற்றைக் கடந்து எண்ணிப்பார்க்கையில் தன்னை விட்டு விட்ட காரணத்தால் ஒன்பது பேர்தான் அங்கு உள்ளதாகத்

தோன்ற அவன் பத்தாவது மனிதனைத் தேடுகிறான். இங்கு இருக்கின்ற பொருள் அறியாமையால் இழக்கப்பட்டது. அவன் ஞானத்தால் தான் அடைய முடியும். அதுபோல் மோக்ஷம் அல்லது பரம்பொருளை அடைதல் ஞானத்தால். அது எங்கும் எப்பொழுதும் உள்ள பூர்ணதத்வம். அறியாமையால் இழந்ததுபோல் தோன்றுகின்றது. ஆகவே அறியாமையை நீக்க ஞானம் தேவை. அடுத்த கேள்வி - 'ஞானத்தை எப்படி அடைதல்?' என்பது.

ஞானத்தை அடைய விரும்புபவனை ( प्रमाता) ப்ரமாதா என்றும், எதைப்பற்றிய ஞானத்தை அடைய விரும்புகிறானோ அந்தப் பொருளை (प्रमेयं) ப்ரமேயம் என்றும் அழைப்பர். ஞானத்தை அடையவிரும்பும் ப்ரமாதா ஒரு கருவியின் துணையின்றி ப்ரமேயத்தை அதாவது பொருளை அறியமுடியாது. உதாரணமாக ஒரு பூவின் வண்ணத்தைப் பற்றிய ஞானம் தேவை எனில் கண் என்ற கருவியைப் பயன் படுத்தியே ஆகவேண்டும். சப்தத்தை அறிய காது கருவி. அந்தக் கருவி ( प्रमाण) ப்ரமாணம் என்று கூறப்படுகிறது. ஆகவே ஞானம் ப்ரமாணத்தின் மூலம் தான் வரும். இங்கு பரம்பொருளைப் பற்றிய அறிவை அடைய வேண்டுமானால், அந்த அறிவைக் கொடுக்க கருவியாக அதாவது ப்ரமாணமாக இருப்பது வேதாந்த சாஸ்திரம். அந்த வேதாந்தத்தைக் குருவின் துணையுடன் கேட்டல் ஞானயோகத்தின் முதல் அங்கம்.

**ச்ரவணம் :-**

ச்ரவணம் என்றால் கேட்டல். - வேதாந்தத்தைக் குருவிடமிருந்து கேட்பது. சில காலங்கள் தொடர்ந்து கேட்பது மட்டும் ச்ரவணம் என்ற சொல்லின் பொருள் அன்று. வேதாந்தம் எந்தக் கருத்தை மையமாகக் கொண்டுள்ளது என அறிவது தான் ச்ரவணம். உபநிஷத் ஜீவன், ஜகத், (உலகம்) ஈஸ்வரன் என்ற மூன்றை பற்றிப் பேசுகிறது. இவைகளைப் பற்றி இறுதியாக உபநிஷத் என்ன கூறுகின்றது என்று புரியும் வரை நாம் குருவிடம் உபநிஷத்தைக் கேட்பதற்கு ச்ரவணம் என்று பெயர். ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் என்ன சம்பந்தம் என்று நிச்சயம் செய்வதே இந்த ஸாதனை. உபநிஷத் இவ்விருவருக்கும் முதலில் படைப்பவன், படைக்கப்பட்டவன் என ஈஸ்வரனுக்கும் ஜீவனுக்கும் ஸம்பந்தம் கூறி, இறுதியில் இரண்டும் வேறல்ல என்று கூறுகிறது. பின் ஜகத்தையும் தோற்றம் தான் எனக் கூறி இருப்பது ஒரே பொருள் என்கிறது. இந்த அறிவைப் பெறுவதே ச்ரவணம் என்ற ஸாதனையின் மூலம் அடையப்படும் பலன்.

**மனனம் :-**

ஜீவனாகிய நமக்கும் ஈச்வரனுக்கும் ஐக்கியம் என்று உபநிஷத் கூறுகிறது என தெரிந்தவுடன் நமக்கு இது எப்படி சரி என்ற சந்தேகம் தோன்றலாம். காரணம் - நம் அனுபவம் நம்மைத் துயரத்தை உடையவனாகக் காட்டுகிறது. உபநிஷத்தோ

துயரமற்ற ஈச்வரனுடன் வேறில்லாதவன் எனக் கூறுகிறது. ஆகவே அனுபவத்திற்கும் சாஸ்திர உபதேசத்திற்கும் விரோதம் தோன்றுவதால் சந்தேகம் வரலாம். மற்றும், வேறு சில மதங்கள் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் பல விதங்களில் ஸம்பந்தம் கூறுகின்றன. ஆகவே அவ்வித சந்தேகங்களை நீக்க ச்ரவணத்தைத் தொடர்ந்து செய்ய வேண்டிய ஸாதனை மனனம். மனனம் என்றால் சிந்தித்து சந்தேகங்களை நீக்குதல். மற்ற மத கொள்கைக்கும், அனுபவத்திற்கும் அத்வைதத்துடன் எப்படி முரண்பாடு இல்லை என சிந்தித்துத் தெளிதல் மனனம். மற்ற மதங்கள் உபநிஷத் வாக்கியத்தைச் சரியாகப் பொருள் படுத்தவில்லை எனவும், நம் அனுபவம் அழிகின்ற உடலின் அடிப்படையில் இருப்பதாலும் தான் அத்வைதத்துடன் முரண்படுவதுபோல் தோன்றுகிறது. உண்மையில் அத்வைதமே சரி என சந்தேகமற அறிதல் மனனத்தின் பலன்.

**நிதித்யாஸனம் :—**

உபநிஷத்திலிருந்து அறிவை அடைந்து, சந்தேகத்தை நீக்கிய பின்னும் ஸாதகன் மற்றொரு இடையூறைச் சந்திக்கிறான். அறிவு இருந்தும் பழக்கதோஷத்தால் மனம் மீண்டும் மீண்டும் சரீரத்தை தான் என்று கொண்டு அறிவைப் பயன்படுத்துவதில்லை. ஆகவே அடைந்த ஞானத்தில் நிலை பெறச் செய்யப்படும் த்யானத்திற்கு நிதித்யாஸனம் என்று பெயர். இது ஒரு விதமான

த்யானம். நாம் பெற்ற ஜீவ - ஈச்வர ஐக்கிய ஞானத்தில் மனதை இருத்திப் பழகுதல். ஆகவே இந்த ஸாதனை ஞானத்தை ஞான நிஷ்டை ஆக்குகிறது.

ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் மூன்றும் சேர்ந்தே ஞானயோகம் என்று கூறப்படுகிறது.

# VII பக்தி (भक्तिः)

இறைவனிடத்தில் செலுத்தப்படும் அன்பு, இறைவனை நாடுதல், வழிபடுதல் போன்றவை பக்தி என்று நாம் பொதுவாக அறிந்துள்ளோம். பக்தி என்ற சொல் (भज्) । பஜ் என்ற வினையடியிலிருந்து வந்தது. இதன் பொருள் வழிபடுதல், நாடுதல் முதலியன.

தவம் என்ற சொல் நமக்குத் தெரிந்தது. இந்தச் சொல் எந்தக் குறிப்பிட்ட ஸாதனையையும் குறிக்காது. நாம் ஆன்மீக வாழ்க்கையில் முன்னேறச் செய்யப்படும் அனைத்து ஸாதனைக்கும் பொதுவான சொல் தபஸ். உணவுக் கட்டுப்பாடு, த்யானம், சாஸ்திரம் படித்தல் முதலிய எல்லா ஸாதனைக்கும் பொதுவான சொல் தவம். அதுபோல பக்தி என்ற சொல் சாஸ்திரத்தில் பலவிதமான ஸாதனைக்குப் பொதுவாகப் பயன்படுத்தப்படுகிறது. ஆகவே பக்தி பலவிதபடியைக் கொண்டது. எங்கெல்லாம் பக்தி " என்ற சொல் பயன்படுத்தப்படுகின்றது எனச் சுருக்கமாகப் பார்ப்போம்.

மனிதன் அன்றாட வாழ்க்கையில் அடைய விரும்பும் பொருள்கள் பல உள்ளன. அவைகள் ஆரோக்யம், செல்வம், வீடு, மகன் முதலியன. இவைகளை அடைய மனிதன் முயற்சி செய்கிறான். இவைகள் அனைத்தும் தனக்கு இன்பம் வேண்டும் என்ற விருப்பத்தால் நாடுகிறான். அதோடு எவ்விதத்திலும் துயரம் வரக் கூடாது என்று துயரமான சூழ்நிலை வந்தால் அதிலிருந்தும்

விடுபட முயற்சி செய்கிறான். இவ்விதம் இயல்பாக மனிதர்கள் இன்பத்தை நாடித் துயரத்தை நீக்க விரும்புகிறார்கள். தன் சுயமுயற்சியால் மட்டும் ஒருவன் இன்பத்தை நாடி, துயரத்தை நீக்க முடியாது எனப் பலர் உணர்ந்து இறைவன் துணையை நாடுகிறார்கள். இறைவனை வழிபடுகிறார்கள். இறைவன் மீது அன்பு செலுத்துகிறார்கள். இவர்கள் தான் விரும்பியதை அடைய இறைவனை ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறார்கள். இவர்களின் வழிபாடும், பக்தியும் சுயநலமாகவும், காம்யமாகவும் இருப்பினும் இப்படிப்பட்டவர்களையும் பக்தர்கள் எனக் கீதையில் பகவான் ஏற்றுக் கொள்கிறார். பெரும்பாலான மக்களின் பக்தி இந்த விதத்தைச் சார்ந்தது. பொருளை அடைய, துயரத்திலிருந்து நீங்க இறைவனைக் குறித்துச் செய்யப்படும் வழிபாடு இவ்விதமான பக்தி. இது ஆரம்பநிலையில் உள்ளது.

இரண்டாவதாகச் சிலர் இன்பங்கள் நிலையற்றன என அறிந்து, நிலையான பொருளையேதான் நாடவேண்டும் என தீர்மானித்து அதை அடையத் தன்னைத் தகுதிபடுத்தவும், இறைவனை அடையவும், இறைவனை நாடுகிறார்கள். இங்கும் இறைவன் ஒரு கருவியாகப் பயன்படுத்தப்படுகிறார். ஆனால் அடைய வேண்டிய முடிவும் இறைவனே. இவ்விதம் வழிபடுகின்ற ஸாதகர்கள் செய்யும் சாதனைகளும் பக்தி என்று அழைக்கப்படுகின்றன. கர்மயோகம் ஈஸ்வரன் அன்றி நிகழாது. ஆகவே இறைவனுக்காகச் செய்யப்படும் செயல்களும் ஒரு

விதமான பக்தி. உபாஸனை என அழைக்கப்படுவதும் ஒருவிதமான பக்தி. இவ்விதம் ஸாதகன் இறைவனை அடைய இறைவன் ஆசியை நாடுதல் மேலான பக்தி.

மூன்றாவதாக இறைவனைப் பற்றிய ஞானத்தை அடைந்த ஞானி செய்யும் பக்தி. ஒருவன் தன்னைத்தான் முதலில் நேசிக்கிறான். பிறகுதான் அவன், அடைய விரும்பும் பொருள், அதை அடைய உதவும் கருவி, இவைகளை நேசிக்கிறான். ஞானி தானும் இறைவனும் உண்மையில் ஒன்று என அறிவதால் தன்னை நேசிப்பதற்கும் இறைவனை நேசிப்பதற்கும் வேறுபாடு இல்லாமல் ஆகிறது. ஆகவே ஞானி செய்யும் பக்தியே எல்லையற்றது.

இவ்விதம் ஸாதகன் செய்யும் படிப்படியான ஸாதனைகளைப் பக்தி என்ற பொதுவான சொல்லில் சாஸ்திரம் அழைக்கிறது.

# VIII ஸாதன சதுஷ்டய ஸம்பத்தி.
# (साधनचतुषयसंपत्तिः)।

மோக்ஷத்தை அடைய பரம் பொருளைப்பற்றிய ஞானத்தை அடையவேண்டும். அந்த ஞானத்தை அடைய குருவின் துணை கொண்டு வேதாந்தத்தைக் கேட்க வேண்டும் என்று பார்த்தோம். எப்படிப்பட்ட தகுதிகளை ஒரு சிஷ்யன் ஏற்படுத்திக் கொண்டு வேதாந்தத்தைக் கேட்க வேண்டும் என்ற கேள்விக்கு மரபில் வந்தோர் நான்கு விதமான தகுதிகள் சிஷ்யனிடம் இருக்க வேண்டியதாகக் கூறுகிறார்கள். கீழ்க்கண்ட நான்கு தகுதிகளை ஒருவன் அடைந்தபின் வேதாந்தம் கேட்டல், சிந்தித்தல் போன்ற ஞானயோக சாதனையில் ஈடுபட்டால் ஞானம் ஏற்பட்டு மோக்ஷத்தை அடைவான். இத்தகுதிகள் இல்லாமல் சாஸ்திரம் பயின்றால் அதனால் ஞானம் மனதில் ஏற்படாது. ஆகவே இத்தகுதிகள் மிகவும் முக்கியம். நான்கு தகுதிகள் முறையே :-

(1) விவேகம் (2) வைராக்யம் (3) மனக்கட்டுப்பாடு முதலியன (4) முமுக்ஷுத்வம்.

**(1) விவேகம் ( विवेक :)**

விவேகம் என்றால் எது நிலையானது எது நிலையற்றது எனப் பிரித்துப் பார்க்கும் திறன். நாம் பிரித்துப் பார்க்க வேண்டும் எனக் கூறும்போதே இரண்டும் கலந்திருக்க வேண்டும். நிலையான பரம்பொருளுக்கும் நிலையற்ற உலகத்திற்கும் வேறுபாடு தெரியாது. அறியாமையால் நிலையற்ற உலகில் நிலையான சுகத்தையோ

தன்மையையோ ஒருவன் எதிர்பார்க்கிறான். ஆகவே எது என்றுமுள்ளது, எது அழியக்கூடியது என்று உணரும் சக்திக்கே விவேகம் என்று பெயர். நம் அனுபவத்தை ஆராய்ச்சி செய்து பார்த்தால், எந்தப் பொருளும் எந்த உறவும் நிலையானதாக இல்லை எனத் தெரியவரும். அத்துடன் சாஸ்திரமும் கூட இவ்வுலகை நிலையற்றது என்றும், ஸ்வர்க்கம் முதலிய லோகங்களும் என்றும் உள்ளவை அல்ல என்றும் கூறுகிறது. ஆகவே நம் அனுபவம், ஆழ்ந்த சிந்தனை, சாஸ்திரத்தின் துணை இவைகளைக் கொண்டு, இவை அனைத்தும் அழிவுக்கு உட்பட்டது என அறியலாம். நிலையானது ஒன்று இருக்க வேண்டும். அதுவே பரம் பொருள் என்ற அளவில் ஆரம்பத்தில் அறிவு இருந்தால் போதும். அந்த நிலையான பொருளைப் பற்றிய முழுமையான அறிவு ஞானயோகம் என்ற ஸாதனையில் அடையப்படும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் இவ்விதம் பிரித்து உணரக்கூடிய சக்தி இருப்பினும், அது விருப்பு, வெறுப்பு என்ற மன அழுக்கால் மூடப்பட்டு உள்ளது. கர்மயோக வாழ்க்கை மூலம் மனத்தூய்மையை ஒருவன் அடையும் பொழுது விவேக சக்தி வெளிப்படுகிறது. எல்லாத் தகுதிகளுக்கும் ஆரம்பம் இந்த விவேகம் என்ற தகுதியே.

2) வைராக்யம் (वैराग्य)

கண், காது முதலிய புலன்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும்

பொருட்களில் பற்று இல்லாத தன்மை வைராக்யம். எந்தப் பொருளையும் சுகத்திற்கு, அதாவது போகத்திற்கு உரிய பொருள் என பாராதிருத்தல். இது பொருள்களின் மீதுள்ள ஒரு விதமான பாவனை. வெறுப்பு வேறு, வைராக்யம் வேறு. ஆரம்பத்தில் போகத்தைக் கொடுக்கும் பொருளில் வெறுப்பு வருவது வைராக்யம் வர துணைபுரியலாம். உண்மையில் வைராக்யம் என்பது இன்பத்தில் விருப்பற்ற மனநிலை. பொருட்கள் இன்பத்தைக் கொடுக்கும் என்ற பாவனை மோஹம். அதற்கு எதிர்மறையானது வைராக்யம்.

எது நிலையானது, எது நிலையற்றது என விவேகம் காட்டும் நிலையற்ற பொருளின் மீது நமக்கு இருக்க வேண்டிய பாவனை வைராக்யம். எந்த பொருளையும் போகத்திற்கு உரிய பொருளாகப் பார்க்காதிருத்தல் வைராக்யம். இந்த வைராக்யத்தை அடைய பொருள்களிடமுள்ள குறைகளை ஆழ்ந்து சிந்தித்து விவேகத்தை உறுதி செய்து பழக வேண்டும். விவேகம் என்ற காய் பழுத்தால் அது வைராக்யம். விவேகம் இருந்தும், வைராக்யம் வராமல் இருக்கலாம். ஆகவே வைராக்யத்தை அடைய முயற்சி தேவை. வேதாந்தத்தில் மனத்தூய்மை என்பது அவன் அடைந்துள்ள வைராக்யமே.

3) மனக்கட்டுப்பாடு முதலிய ஆறு தகுதிகள் :

( शमादिषट्कसंपत्ति :)

இந்த மூன்றாவது ஸாதனை ஆறு தகுதிகளின் தொகுதி. கீழ்க்கண்ட ஆறு தகுதிகளும் சேர்ந்து இங்கு மூன்றாவதாகக் கூறப்பட்டுள்ளது.

| | | | | |
|---|---|---|---|---|
| i) | சமம | (शम :) | - | மனக்கட்டுப்பாடு |
| ii) | தமம் | (दम :) | - | இந்திரியக் கட்டுப்பாடு |
| iii) | உபரமம் | (उपरम :) | - | விலகியிருத்தல் |
| iv) | திதிக்ஷா | (तितिक्षा ) | - | பொறுமை |
| v) | ச்ரத்தா | ( श्रध्दा ) | - | நம்பிக்கை |
| vi) | ஸமாதானம் | (समाधानं ) | - | மன ஒருமுகப்பாடு |

இங்கு கூறப்பட்டுள்ள தகுதிகளை அடைய நாம் பார்த்த உபாஸனம் என்ற ஸாதனையே மார்க்கமாக உள்ளது.

i) शम : - சமம் - மனக்கட்டுப்பாடு.

மனம் ஒரு கருவி. அது பயன்படுத்துபவன் கட்டிற்குள் இருக்க வேண்டும். அவ்விதம் அலைபாய்ந்து கொண்டுள்ள மனதை அமைதிப்படுத்துவதே சமம் எனக் கூறப்படுகிறது. மனச்சிதறல் இரண்டு விதத்தில் ஏற்படலாம்.

1) நடந்த அனுபவங்கள் நடக்க வேண்டும் என சில கற்பனைகளால் மனம் ஸங்கல்பம் செய்து தேவையில்லாமல் சிதறலாம்.

2) இந்திரியங்களான காது, கண் முதலியவற்றின் மூலம் மனம் சிதறடையலாம்.

இராண்டாவது விதத்தில் மனதைப் பாதுகாப்பது அடுத்த ஸாதனை. இங்கு மனதைத் தேவையற்ற சிந்தனைகளிலிருந்து விடுவித்து அமைதிப்படுத்துதல். நல்ல பண்புகள் குறைந்தாலும் மனம் சஞ்சலத்திற்கு உட்படும். ஆகவே நல்ல பண்புகளுடன்

மனதை முறைப்படுத்துதல் சமம் என்ற சொல்லில் குறிப்பிடப்படும்.

2) दम : - தமம் - இந்திரிய ஒழுக்கம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து இந்திரியங்களைத் தவறான பொருளை நோக்கிப் போகாமல் பாதுகாத்தல். ஐந்து இந்திரியங்கள் வழியாக மனம் சிதறடையலாம். அவ்விதம் மனசஞ்சலம் வரும் விஷயத்தில் இந்திரிய ஓட்டத்தைத் தடை செய்தல் தமம் எனக் கூறப்படுகிறது.

3) उपरम : - உபரமம் - விலகியிருத்தல்.

சமம், தமம் என்ற இரண்டு சாதனைகள் மூலம் அடக்கப்பட்ட மனதை அவ்விதமே வைத்துப் பழகுதல் உபரமம். மனம் நன்கு அடங்கும் வரை நாம் விலகி இருத்தல் மிகவும் அவசியம். இந்த ஸாதனை ஸந்யாஸம் என்றும் கூறப்படும்.

4) तितिक्षा - திதிக்ஷா - ஸஹிப்புத் தன்மை.

இந்த உலகில் நாம் குளிர், வெப்பம் இன்பம், துன்பம் மானம், அவமானம் என்ற இருமைகளைச் சந்தித்துதான் ஆகவேண்டும். அவ்விதம் அவைகளைச் சந்திக்கும் பொழுது பொறுத்துக் கொள்ளுதல் முக்கியமான பண்பு. பொறுமை இருந்தால் தான் நாம் ஸாதனைகளைத் தொடர்ந்து செய்து வெற்றி அடைய முடியும்.

5) श्रद्धा - ச்ரத்தா - நம்பிக்கை.

சாஸ்திரத்திலும், குருவினுடைய சொல்லிலும் உள்ள நம்பிக்கை ச்ரத்தா. குரு உபதேசிக்கின்ற சாஸ்திரம் நம்

அனுபவத்திற்கு விரோதமாகத் தோன்றும் பொழுது, சாஸ்திரத்தை நீக்காமல் நம்பிக்கையுடன் அந்த உபதேசத்தை விசாரித்துத் தெளிய வேண்டுமானால் இந்த ஸாதனை மிக முக்கியம். வேதம் என்பது கடவுளின் சொல். ஆகவே இறைவன் வேதத்தின் மூலம் பேசுகிறான் என்ற முழு நம்பிக்கை தேவை.

6) समाधानं - சமாதானம் - மன ஒருமுகப்பாடு.

எடுத்துக் கொண்ட பொருளில் மனதைப் பொறுத்துதல் சமாதானம். எந்த மனத் தடையுமின்றி லக்ஷியத்திலேயே மனதைப் பயன்படுத்துதல்.

இவ்விதம் மேற்கூறிய ஆறு ஸாதனைகளும் சேர்ந்து மூன்றாவதாக கூறப்படுகிறது.

4) मुमुक्षुत्वं - முமுக்ஷுத்வம் - இறைநாட்டம்.

மோக்ஷத்தை அடையவேண்டும் என்ற தீவிரமான ஆசை. அந்த மோக்ஷத்தை அடைய ஞானயோகம் வழி என அறிந்து அந்த வழியில் செல்தல். மோக்ஷத்தை அடையவேண்டும் என்ற ஆசை உச்சக்கட்டத்தில் இருப்பதே இந்தத் தகுதி.

இவ்விதம் நான்கு தகுதிகள் கூறப்பட்டு, இவைகள் யாரிடத்தில் உள்ளனவோ அவர்களே மோக்ஷத்திற்குத் தகுதி அடைந்தவர்கள். அவர்கள் ஞானயோக ஸாதனையைப் பின்பற்றினால் அதன் பலனான மோக்ஷத்தை அடைவார்கள் என்று கூறப்படுகிறது.

# IX ஜீவ விசாரம்

ஞானயோகம் என்பது சாஸ்திரத்தைக் கேட்டல், மனனம் செய்தல், த்யானித்தல் என்று பார்த்தோம். இந்த ஞானயோகத்திற்கு ஒருவன் தயார் செய்து கொள்வது என்பது ஸாதன சதுஷ்டய ஸம்பத்தி என்ற ஸாதனைகளை அடைதல் என்றும் பார்த்தோம். இனி உபநிஷத்தில் என்ன அறிவு கூறப்படுகின்றது என பார்க்க வேண்டும். இப்பொழுதுதான் உபநிஷத் உபதேசிக்கும் தத்துவத்தைப் பார்க்கப் போகிறோம்.

உபநிஷத் உபதேசிக்க இருக்கும் தத்துவத்தை நான்கு தலைப்பில் அடக்கலாம்.

(1) ஜீவ விசாரம்

(2) ஈச்வர விசாரம்

(3) ஜீவ ஈச்வர ஸம்பந்த விசாரம்

(4) ஞானபலன்

முதலில் ஜீவ விசாரத்தைப் பார்ப்போம்.

'நான்' 'நான்' என்று நாம் கூறும்பொழுது, அந்த 'நான்' என்ற சொல்லுக்கு ஜீவன் என்ற பெயரைச் சாஸ்திரம் கொடுக்கிறது. அதாவது உயிர்வாழ்கின்ற அனைத்தும் ஜீவன் அல்லது ப்ராணி என்று கூறலாம். ஆகவே மனிதர்களாகிய நாம் ஜீவர்கள்.

ஜீவன் இரண்டு அம்சத்துடன் (பகுதியுடன்) கூடியவன், ஒரு பகுதி அறிவுடைய தன்மை. அது சேதன தத்துவம் என்று அழைக்கப்படுகிறது.

இன்னொரு பகுதி ஜடத்தன்மை. அது அசேதன தத்துவம் என்று அழைக்கப்படுகிறது. 'நான் பேசுகிறேன்', 'நான் நடக்கிறேன்', என்றெல்லாம் நாம் கூறும் பொழுது 'நான்' என்ற சொல்லில் அறிவுடைய தத்துவம், அதாவது சேதன தத்துவம் அடங்கும். அதோடு அசேதனமான, அதாவது ஜடத்தன்மையுடைய உடலையும் சேர்த்து நான் என்ற சொல்லில் புரிந்து கொண்டுள்ளோம். ஆகவே 'நான்' அல்லது 'ஜீவன்' என்ற சொல்லில் சேதன அசேதன அம்சங்கள் சேர்ந்துள்ளன. சேதனமான அம்சம் ஆத்மா என்றும் அசேதனமான அம்சம் அனாத்மா என்றும் அழைக்கப்படுகின்றன. ஆகவே ஜீவன் ஆத்ம அனாத்மாவின் சேர்க்கை.

முதலில் ஜீவனின் அனாத்மாவை அதாவது ஜட அம்சத்தைப் பற்றி விசாரிப்போம்.

ஜீவன் உடல்தான் அனாத்மா. ஒவ்வொரு ஜீவனுக்கும் மூன்று உடல்கள் உள்ளன. அவை.

(i) ஸ்தூல சரீரம்

(ii) ஸூக்ஷ்ம சரீரம்

(iii) காரண சரீரம்

ஜீவனின் அனாத்மா மூன்று உடல்களாக இவ்விதம் பிரிக்கப்படுகிறது :-

(i) ஸ்தூல சரீரம் :

நாம் புலன்களால் அனுபவிக்கும் உடல். இது ஐந்து

பூதங்களான ஆகாசம், காற்று, நெருப்பு, நீர், பூமி இவைகளால் தோற்றுவிக்கப்பட்டது. இந்த ஸ்தூல உடலைவிட்டு உயிர் சென்று விட்டால் இவ்வுடல் அந்தந்த பூதங்களுடன் சேர்ந்து விடுகிறது. ஐந்து பூதங்களால் ஸ்தூல சரீரம் உருவாக்கப் பட்டபோதிலும் ஒவ்வொருவருக்கும் விதவிதமான உடல் அமைகிறது. சில ஜீவர்களுக்கு மனித உடல், சில ஜீவர்களுக்குப் பறவை, மிருகம் போன்ற விதவிதமான உடல். குறிப்பிட்ட உடலை அடையக் காரணம் ஜீவன் சேர்த்து வைத்த கர்மபலன். கர்மபலனுக்கு ஏற்ப உடல் அமைகிறது. ஆகவே நமக்குக் கிடைத்த உடல் நாம் ஈட்டியது.

இந்த ஸ்தூல சரீரம் ஆறு விதமான மாறுதலுக்கு உட்பட்டது.

(i) அஸ்தி - தாயின் வயிற்றில் கரு ரூபமாக இருத்தல்.

(ii) ஜாயதே - பிறத்தல்

(iii) வர்ததே - வளர்தல்

(iv) விபரிணமதே - மாறுபாடு அடைதல்

(V) அபக்ஷீயதே - தேய்தல்

(vi) ம்ரியதே - மரணம் அடைதல்.

இவ்விதம் ஆறுவித விகாரத்தை உடையது இந்த ஸ்தூல சரீரம். இந்த உடலில் அமர்ந்து ஜீவன் சுகதுக்கத்தை அனுபவிப்பதால், இந்த உடல் போக ஆயதனம் - போகத்திற்கான வீடு என்று அழைக்கப்படுகிறது.

(ii) ஸூக்ஷ்ம சரீரம் :-

நம் மனம்தான் ஸூக்ஷ்ம சரீரம். நேரடியாகப் பார்க்க முடியாவிட்டாலும், நம் மனதை நாம் அறிவோம். நாம் பார்த்து அனுபவிக்கும் ஐந்து பூதங்கள் ஸ்தூல பூதங்கள். இவைகள் தோன்றுவதற்கு முன் ஐந்தும் ஸூக்ஷ்மமாக இருந்தன. அந்த ஸூக்ஷ்மமான ஐந்து பூதங்களிலிருந்து படைக்கப்பட்டதே ஸூக்ஷ்ம சரீரம். இந்த ஸூக்ஷ்ம சரீரம் நாம் போகத்தை அனுபவிக்கக் கருவியாக உள்ளதால், இந்த உடல் போகஸாதனம் என்று கூறப்படுகிறது. ஆகவே ஸூக்ஷ்ம சரீரம் என்பது ஒரு கருவி. இது 19 அவயவங்களைக் கொண்டது. 19 அங்கங்களின் சேர்க்கையே ஸூக்ஷ்ம சரீரம். அவை :-

| | |
|---|---|
| ஞானேந்திரியங்கள் | 5 |
| கர்மேந்திரியங்கள் | 5 |
| ப்ராணன் | 5 |
| மனம் | 1 |
| புத்தி | 1 |
| சித்தம் | 1 |
| அஹங்காரம் | 1 |
| | 19 |

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பது ஐந்து ஞானேந்திரியங்கள். இவைகள் மூலம் ஞானம் ஏற்படுவதால் இவ்வைந்திற்கும் ஞானேந்திரியங்கள் என்று பெயர். இங்கு

மெய் என்பது தொட்டு உணரும் சக்தி. வாய் என்பது சுவைக்கும் திறன். அதுபோல், பார்த்தல், நுகர்தல், கேட்டல் என்பதும் ஞானேந்திரியங்கள்.

ஐந்து கர்மேந்திரியங்கள் என்பது செயல் புரிவதற்கான சக்தி.

இவைகள் :

(i) வாக் - பேசும் சக்தி

(ii) பாணி - கைகள்

(iii) பாதம் - கால்கள்

(iv) பாயு - மலத்தியாகம் செய்யும் கருவி

(v) உபஸ்தம் - உற்பத்தி உறுப்பு

ஐந்து ப்ராணன்கள் முறையே :

i) ப்ராணன் - வெளி விடும் மூச்சுக்காற்று

ii) அபானன் - உள்ளே இழுக்கும் மூச்சுக்காற்று

iii) வ்யானன் - ரத்தத்தை உடல் முழுவதும் எடுத்துச் செல்லும் சக்தி

iv) ஸமானன் - உணவைச் செரிக்கும் சக்தி

v) உதானன் - எதிராகச் செயல்படும் சக்தி. தும்மல், வாந்தி போன்றது. மரணகாலத்தில் உதானசக்தி முழுமையாக வெளிப்பட்டு, ஸ்தூல சரீரத்திலிருந்து ஸூக்ஷ்ம சரீரத்தை எடுத்துச் செல்லும்.

மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் - இந்த நான்கும் மனதில் உள்ள எண்ணங்கள் தான். எண்ணங்களின் தன்மை, செயல்பாடு, இவற்றின் அடிப்படையில் நான்காகப் பிரிக்கப்படுகிறது.

i) மனம் - ஸங்கல்பம் விகல்பமானது சந்தேகித்தல், முதலிய உணர்வுகளைக் கொண்டது.

ii) புத்தி - நிச்சயம் செய்யும் திறன்.

iii) சித்தம் - ஞாபகசக்தி

iv) அஹங்காரம் - அனாத்மாவான சரீரங்களை நான் என்று க்ரஹிக்கும் எண்ணம்.

இவ்விதம் 19 அம்சங்களைக் கொண்ட இரண்டாவது சரீரம் ஸூக்ஷ்ம சரீரம்.

(iii) காரண சரீரம் :

ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரத்திற்கு எது காரணமோ அது காரண சரீரம். மரத்திற்கு விதைபோல, மற்ற இரண்டு சரீரத்திற்குக் காரணமானது. காரண சரீரத்தில் வேறுபாடுகள் இல்லாததால், இது எந்த இந்திரியத்தினாலும் அறியப்படாதது. ஆகவே இது அவ்யக்தம் - வெளி தோற்றத்திற்கு வராதது எனக் கூறப்படுகிறது. இதற்குத் தோற்றம் கூற முடியாது. ஆகவே இது அனாதி என்றும் கூறப்படுகிறது. இதன் தன்மையை விளக்கவும் முடியாததால், இது அனிர்வசனீயம் எனவும் வர்ணிக்கப்படுகிறது. எல்லா ஜீவர்களில் காரண சரீரங்களும் முழுமையாக பார்த்தால், 'மாயை' என்று கூறப்படுகிறது. வேதாந்த நூல்களை நன்கு முறையாகப் படிக்கும்

பொழுதுதான் காரணசரீரம் பற்றிய தத்துவம் நன்கு விளங்கும். இங்கு ஓரளவு புரிந்தால் போதுமானது.

பஞ்ச கோசங்கள் :-

நாம் பார்த்த இந்த மூன்று சரீரங்களையே வேறு ஒரு கோணத்தில் சாஸ்திரம் ஐந்தாகப் பிரிக்கிறது. மூன்று சரீரங்களை ஐந்து கோசமாக கூறுகிறது. கோசம் என்றால் உறை. வாள். கத்தி முதலிய ஆயுதங்களுக்குப் பயன்படுத்தும் உறைக்குக் கோசம் என்று பெயர். இந்த உறை, உள்ளே இருக்கும் கத்தியை மறைக்கிறது. அதே போல், இங்கும் கோசத்தின் செயல் மறைத்தல். நம் கவனம் அனாத்மாவில் செல்வதால், ஆத்மா நமக்கு மறைபடுகிறது. அனாத்மாவான சரீரங்கள் 5 படியில் மறைப்பதால், 5 கோசமாகக் கூறப்படுகிறது. உண்மையில் அனாத்மா ஆத்மாவை மறைக்காது. ஆத்மாவைப் பற்றிய அறிவை நம்மிடமிருந்து நீக்குகிறது. நம் கவனம் அனாத்மாவில் செல்வதால், ஆத்மா அறியப்படவில்லை. ஆகவே அனாத்மாக்கள் கோசமாகக் கூறப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| 1. ஸ்தூல சரீரம் | --- | 1. அன்னமய கோசம், |
| 2. ஸூக்ஷ்ம சரீரம் | --- | 2. ப்ராணமய கோசம், |
| | --- | 3. மனோமய கோசம், |
| | --- | 4. விக்ஞானமய கோசம், |
| 3. காரண சரீரம் | --- | 5. ஆனந்தமய கோசம். |

இவ்விதம் 3- சரீரமே 5 உறையாக பிரிக்கப்படுகிறது.

அன்னமய கோசம் :

நாம் பார்த்து அனுபவிக்கும் உடல் தான் அன்னமய கோசம். அதாவது நம் ஸ்தூல சரீரம். அன்னம் என்றால் உணவு. மயம் என்றால் மாறுபாடு அல்லது விகாரம். நம் உடலை அன்னமயம் என அழைக்கக் காரணம் இவ்வுடல் உணவினுடைய விகாரம். அதாவது பெற்றோர் உண்ட உணவில் தோன்றிய உடல். நாம் உட்கொள்ளும் உணவால் காக்கப்பட்டு, இறந்தபின் நம் உடல் செடிகொடிகளுக்கும் புழுக்களுக்கும் உணவாகப் போகும். உணவில் தோன்றி, உணவால் காக்கப்பட்டு, உணவாகச் செல்லும் உடல் அன்னமயம் என்று கூறப்படுகிறது. இந்த அன்னமயமான உடலில் நான் என்ற அபிமானம் இருப்பதால் ஆத்மா அறியப்படாமல் போகிறது. ஆகவே உடல், கோசமாக - ஆத்மாவை மறைக்கும் கருவியாகக் கூறப்படுகிறது.

2. ப்ராணமய கோசம் :-

ஸூக்ஷ்ம சரீரத்தின் பகுதியான 5 ப்ராணன்களும், 5 கர்மேந்திரியங்களும் சேர்ந்தது ப்ராணமய கோசம். நம் அபிமானம் ப்ராணன், கை, கால், வாக் முதலிய கர்மேந்திரியங்களில் இருப்பதால், நான் ஆத்மா எனத் தெரிய முடியாது போவதால், இவைகள் ஆத்மாவை மறைக்கும் கோசமாகின்றன.

3. மனோமய கோசம் :-

ஸூக்ஷ்ம சரீரத்தின் பகுதியான மனமும் 5 ஞானேந்திரியங்களும் சேர்ந்து இக்கோசமாகிறது.

4. விஞ்ஞானமய கோசம் :-

புத்தியும், 5 ஞானேந்திரியங்களும் சேர்ந்து விஞ்ஞானமய கோசமாகின்றன.

5. ஆனந்தமய கோசம் :-

காரணசரீரம் ஆனந்தமய கோசம் என்று கூறப்படுகிறது.

இவைகள் மீதுள்ள அபிமானத்தால், ஆத்மதத்துவம் அறியப்படாது உள்ளது. ஆகவே நம் அபிமானத்தைப் படிப்படியாக விட்டு இறுதியாக 'ஆத்மா நான்', இக்கோசங்களில் எதுவும் நான் அல்ல என ஜீவன் உணரவேண்டும்.

## அவஸ்தா த்ரயம்.

### अवस्था त्रयम्

ஜீவர்களாகிய நமக்கு 3 விதமான அனுபவங்கள் உள்ளன. அந்த மூன்று வித அனுபவங்கள் அவஸ்தா த்ரயம் என்று கூறப்படுகிறது. அவையாவன :

1) ஜாக்ரத் - விழிப்பு நிலை
2) ஸ்வப்னம் - கனவு நிலை
3) ஸுஷுப்தி - உறக்க நிலை.

1) ஜாக்ரத் (Waking state) - விழிப்பு நிலை :

ஸ்தூல சரீரம் வரை நம்முடைய அபிமானம் சென்று இந்த உலகை இந்திரியங்களால் அனுபவிப்பது விழிப்பு நிலை.

2) ஸ்வப்னம் - (dream state) - கனவு நிலை.

ஸ்தூல சரீரத்தில் அபிமானத்தை விட்டு ஸூக்ஷ்ம சரீரத்தில் மட்டும் அபிமானம் வைத்து மனதினாலேயே உலகை உண்டு செய்து அனுபவிக்கும் நிலையே கனவு.

3. ஸுஷுப்தி (deep sleep state) - உறக்க நிலை.

காரண சரீரத்தில் மட்டும் அபிமானம் வைத்து மற்ற இரு சரீரத்தில் அபிமானம் இல்லாதபோது வரும் அனுபவம் ஆழ்ந்த உறக்கம். இந்த உறக்கத்தில் சுகமும் அறியாமையும் அனுபவிக்கப்படுகின்றன.

இவ்விதம் ஜீவனுக்கு வரும் அனுபவம் மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

ஜீவன் அல்லது நான் என்று கூறும் சொல்லில் இரண்டு அம்சங்கள் உள்ளதாகப் பார்த்தோம். அவை (1) ஆத்மா (2) அனாத்மா.

அனாத்மாவைப் பற்றி இதுவரை பார்த்தோம். ஜீவனின் அனாத்மாவை மூன்று சரீரம், ஐந்து கோசம், மூன்று அவஸ்தையாகப் பார்த்தோம். இனி ஜீவனின் ஆத்ம அம்சத்தை விசாரிப்போம்.

## ஆத்மதத்துவம்.

நான் என்று கூறும் பொழுது அறிவுடைய பகுதி அறிவற்ற உடல் முதலியன விளங்குகின்றன. அறிவற்ற பகுதி அனாத்மா என்று கூறப்பட்டது. அறிவுடைய பகுதியே ஆத்மா. ஆகவே ஆத்மா அறிவு ஸ்வரூபம். த்ருக் ( दृक् ) அறிபவன்.

அனாத்மா த்ருச்யம் (दृश्यं) அறியப்படும் பொருள்.

மூன்று சரீரங்களும், ஐந்து கோசங்களும், மூன்று அவஸ்தைகளும் அறியப்படும் பொருள். இவைகளை யார் அறிகிறானோ, அதுவே ஆத்மா.

ஆத்மாவால் அறியப்படும் பொருளான உடல்கள் மாற்றத்தை அடைகின்றன. இந்த மாற்றத்தை அறிபவன் மாறாது இருக்க வேண்டும். ஆகவே ஆத்மா விகாரம் அதாவது மாற்றம் அற்றது. விகாரம் இல்லை எனில் அழிவும் இல்லை. அழிவு இல்லாமல் என்றும் இருத்தல் ஸத் ஸ்வரூபம் (सत् स्वरूप :) எனக் கூறப்படுகிறது.

ஆகவே ஆத்மாவின் தன்மை सत् ஸத். முக்காலத்திலும் மாற்றத்தை அடையாது என்றும் உள்ளது என்று பொருள். அனாத்மாக்கள் பல இருப்பினும் அவைகள் அனைத்தையும் அறியும் ஆத்மா ஒன்று தான் என சாஸ்திரம் கூறுகிறது. ஆகவே ஸத், சித் (ஞான), பூர்ண ஸ்வரூபமானது ஆத்மா.

இப்படிப்பட்ட ஸ்வரூபமான ஆத்மாவும் அனாத்மாவும் சேர்ந்தே நாம் புரிந்துள்ளோம். 'நான்' என்று கூறும்பொழுது அழியாத அறிவு ஸ்வரூபமான பூர்ணமான ஆத்மாவை, அழிகின்ற ஜடமான அனாத்மாவுடன் சேர்த்து புரிந்து கொண்டுள்ளோம். சாஸ்திரம் இரண்டையும் பிரித்துக்காட்டி இதில் நீ ஆத்மாவாக மட்டும் இருக்கிறாய் என போதிக்கிறது. ஆத்மாவுக்கும் அனாத்மாவுக்கும் உண்மையில் எவ்வித ஸம்பந்தமும் இல்லை.

இருப்பினும் நம்முடைய அறியாமையால் அனாத்மாவின் தன்மைகளை ஆத்மாவில், அதாவது நம்மீது ஏற்றிவைத்துத் துயரத்திற்கு உள்ளாகிறோம்.

இவ்விதம் ஜீவனை சாஸ்திரம் பிரித்து நீ ஆத்ம ஸ்வரூபம் எனப் போதிக்கிறது.

# X ஈச்வர விசாரம்.

ஜீவன் என்ற சொல்லில் எப்படி இரண்டு அம்சங்கள் உள்ளன எனப் பிரித்து விசாரித்தோமோ, அதுபோல் ஈச்வரன் என்ற சொல்லிலும் இரண்டு அம்சங்கள் உள்ளன. அதில் ஒன்று சேதன (அறிவு) தத்துவம். இரண்டாவது ஜடதத்துவம்.

ஈச்வரனின் சேதன தத்துவம் ப்ரஹ்மன் என்றும், ஈச்வரனின் ஜட தத்துவம் மாயை என்றும் கூறப்படுகின்றன. ஆகவே ப்ரஹ்ம - மாயா தத்துவத்தின் சேர்க்கையே ஈச்வரன். இனி ஈச்வரனின் மாயா அம்சத்தை விசாரிப்போம்.

மாயா விசாரம் :

(i) மாயை மூன்று குணங்களின் வடிவம் - சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணரூபமானது மாயை.

(ii) மாயைக்கு மற்றொரு பெயர் காரண ப்ரபஞ்சம், இந்த மாயையே பரிணாமம் அடைந்து சூக்ஷ்ம, ஸ்தூல உலகாக மாறுவதால் இது காரண ப்ரபஞ்சம் என்றும் அழைக்கப்படுகிறது.

(iii) மாயை எப்பொழுது தோன்றியது என்று கூறமுடியாது. காலம் என்பது ஸ்தூல ஸூக்ஷ்ம படைப்பிற்குப் பின் வருவதால் காலத்தை வைத்து மாயையை அளக்க முடியாததால் அனாதி - தோற்றத்தைக் கூறமுடியாது என்றும் மாயை விளக்கப்படுகிறது.

(iv) இப்படிப்பட்ட மாயை ப்ரஹ்மத்தைச் சார்ந்து தான் இருக்கும். தனியாக அதற்கு இருப்பு இல்லை. ஆகவே

மாயை ப்ரஹ்மஆச்ரயம் என்றும் அழைக்கப்படும்.

மாயை தன்னளவில் ஜடமாக இருந்தாலும் ப்ரஹ்மதத்துவத்துடன் சேரும் போது சேதன தன்மையைப் பெறுகிறது. இப்படிப்பட்ட மாயையும் ப்ரஹ்மமும் சேர்ந்தது தான் ஈச்வரன் என்று சொல்லப்படுகிறது.

சாஸ்திரம் ஈச்வரனை முதலில் இந்த உலகிற்குக் காரணம் என்று அறிமுகப்படுத்துகிறது. ஆகவே ஈச்வரனின் லக்ஷணம் ஜகத்காரணம். படைப்பிற்கு எவர் காரணமானவரோ அவர் ஈச்வரன். எது படைக்கப்பட்டதோ அது கார்யம் என்று கூறப்படும். உதாரணமாகப் பானை கார்யம். களிமண் காரணம்.

ஒரு பொருள் தோன்றுவதற்கு எது மூலகாரணமோ அதற்கு உபாதான காரணம் என்றும், ஒரு பொருளைத் தோற்றுவிக்க அறிவு பூர்வமாகச் செயல்படுபவனுக்கு நிமித்த காரணம் என்றும் பெயர்.

களிமண், பானை என்ற கார்யத்திற்கு உபாதான காரணம், பானையை உருவாக்கிய குயவன் நிமித்த காரணம். இவ்விதம் காரணம் இரண்டு வகைப்படும். எப்பொருளினால் ஒன்று தோன்றுகிறதோ, அது உபாதான காரணம். அவ்விதம் அறிவுப் பூர்வமாகத் தோற்றுவிப்பவன் நிமித்தகாரணம்.

சாதாரணமாகக் கார்யத்தின் உபாதான காரணம் வேறாகவும், நிமித்த காரணம் வேறாகவும் இருக்கும். ஆனால் இப்பிரபஞ்ச விஷயத்தில், ஈச்வரன் ஒருவனே உபாதான காரணமாகவும்

நிமித்த காரணமாகவும் விளங்குகிறார். எப்படி சிலந்திப் பூச்சி தானே தன் வலையை உற்பத்தி செய்யும் விதத்தில் இரண்டு காரணமாகவும் இருக்கிறதோ அதுபோல் ஈச்வரன் இந்த உலகப் படைப்பிற்கு உபாதான காரணம், நிமித்த காரணம் இரண்டும் ஆவார்.

ஈச்வரன் என்பவர் மாயை - ப்ரஹ்மன் என்ற இரண்டு தத்துவத்தின் சேர்க்கை என்று பார்த்தோம். மாயையின் அடிப்படையில் ஈச்வரன் உபாதான காரணம், மாயைதான் இப்பிரபஞ்சமாக மாறி விளங்குகிறது.

ப்ரஹ்ம தத்துவத்தின் அடிப்படையில் ஈச்வரன் நிமித்த காரணம்.

## ஸ்ருஷ்டி – ஸ்ரூஷ்டி :।

ஈச்வரன் தன்னுடைய மாயா அம்சத்தின் துணை கொண்டு எப்படிப் படைக்கிறார் என்று பார்ப்போம். மாயை என்பது ஈச்வரனிடம் இருக்கின்ற தத்துவம். அதாவது ப்ரஹ்ம சொரூபமாக உள்ள ஈச்வரனைச் சார்ந்து இருக்கிறது. மாயா அம்சத்தின் விரிவே இவ்வுலகம். ஒரு பொருளிலிருந்து மற்றொன்று தோன்றினால், அந்த தோன்றிய பொருளான கார்யமானது எதனிடத்திலிருந்து தோன்றியதோ, அந்தக் காரணத்தின் தன்மையுடன்தான் இருக்கும். காரணத்தின் தன்மை கார்யத்தில் தொடர்ந்து இருக்கும் என்பது ஒரு பொது நியதி. மாயை எப்படிப்பட்டதோ, அதன் தன்மை

இந்தப் படைப்பிலும் இருக்க வேண்டும். மாயையானது மூன்று குணங்களான சத்வ ரஜஸ் தமஸின் ஸ்வரூபம். இந்த மூன்று குணங்களும் தோன்றிய இவ்வுலகில் இருக்கின்றன. ஆகவேதான் உலகம் மூன்று குணவடிவம் என்று அழைக்கப்படுகிறது. களிமண்ணிலிருந்து தோன்றிய பானைகள் களிமண் ஸ்வரூபமாக இருப்பதுபோல், மாயா அம்சத்திலிருந்து தோன்றிய உலகம் மாயையின் குண - ஸ்வரூபமாகவே உள்ளது.

மேலும் எந்த ஒரு படைப்பும் படிப்படியாகவே நடைபெறும். படைப்பு காரணநிலை, சூக்ஷ்மநிலை, ஸ்தூல நிலை எனத் தோன்றும். பானையைப் படைப்பவன் முதலில் மனதில் ஸூக்ஷ்மமாகப் படைக்கிறான். பிறகுதான் ஸ்தூலமான படைப்பு தொடரும். அதுபோல் படைப்புக்குக் காரணநிலையே மாயை. இந்தக் காரணமான மாயையிலிருந்து முதலில் ஈச்வரன் ஸூக்ஷ்மமான பூதங்களைப் படைக்கிறார். பின் ஸ்தூல பூதங்கள் படைக்கப்படுகின்றன.

முதலில் மாயையிலிருந்து ஸூக்ஷ்மமான ஆகாசம் தோன்றுகிறது. பின் ஸூக்ஷ்மமான வாயு, அதை அடுத்து ஸூக்ஷ்மமான நெருப்பு, பின் ஸூக்ஷ்மமான நீர், பிறகு ஸூக்ஷ்மமான பூமி, இவ்விதம் 5-ஸூக்ஷ்மமான பூதங்கள் படிப்படியாக முதலில் படைக்கப்படுகின்றன. இந்த நிலையில் இருக்கும் ஸூக்ஷ்மமான பூதங்கள் பார்த்து அனுபவிக்கப்-படுவதில்லை. இவைகள் ஸூக்ஷ்மமானவை. மாயையில்

மூன்று குணங்கள் இருக்கின்றன எனில், அந்த மாயையிலிருந்து தோன்றிய 5 ஸூக்ஷ்ம பூதங்களிலும் மூன்று குணங்கள் இருக்க வேண்டும். ஆகவே மூன்று குணங்களைக் கொண்ட 5 ஸூக்ஷ்ம பூதங்கள் முதலில் படைக்கப்பட்டுள்ளன. படைக்கப்பட்ட 5 ஸூக்ஷ்ம பூதங்களில் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற 3 குணங்கள் உள்ளன. அடுத்ததாக 5 ஸூக்ஷ்ம பூதங்களில் உள்ள ஸத்வ அம்சத்திலிருந்து ஜீவராசிகளுடைய ஞானேந்திரியங்களும் மனமும் படைக்கப்படுகின்றன.

ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களிடத்துள்ள ரஜோ குணத்திலிருந்து ஜீவராசிகளின் கர்மேந்திரியங்களும், ப்ராணனும் படைக்கப்படுகின்றன.

ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களின் தமோகுணங்கள் ஒன்றோடு ஒன்று பஞ்சீகரணம் என்ற முறையில் சேர்ந்து நாம் அனுபவிக்கும் ஜடமான ஸ்தூல பஞ்சபூதங்கள் தோன்றின. இந்த ஸ்தூல உலகிலிருந்தே ஜீவராசிகளின் ஸ்தூல சரீரம் உண்டாகிறது.

இவ்விதம் முதலில் ஸூக்ஷ்ம ப்ரபஞ்சப்படைப்பு, பின் ஸூக்ஷ்ம சரீர அம்சங்களின் படைப்பு, பிறகு ஸ்தூல ப்ரபஞ்சத்தின் படைப்பு. தொடர்ந்து ஸ்தூல சரீரங்களின் படைப்பு என்ற முறையில் ஸ்ருஷ்டி அமைகிறது

இதைக் கீழ் உள்ள அட்டவணை விளக்குகிறது.

மாயை = (காரணப்ரபஞ்சம்)



பஞ்ச ஸூக்ஷ்ம பூதங்கள்




இனி மூன்று குணங்களின் ஸ்வபாவங்களைப் பார்ப்போம்.

ஸத்வகுணத்தின் வெளிப்பாடு அறிவு, ரஜோகுணத்தின் வெளிப்பாடு செயல். தமோகுணத்தின் வெளிப்பாடு ஜடத்தன்மை.

ஞானேந்திரியங்களும் மனதும் ஸத்வகுணத்திலிருந்து படைக்கப்பட்டதால் அறிவை அடைய ஸாதனமாகின்றன. கர்மேந்திரியங்களும் ப்ராணனும் ரஜோகுணத்திலிருந்து படைக்கப்பட்டதால் செயல் செய்யும் திறனை உடையதாகின்றன. தமோகுணத்திலிருந்து இந்த ஸ்தூலப் ப்ரபஞ்சம் படைக்கப்பட்டதால் ஜடத்தன்மையுடன் இருக்கிறது.

இவ்விதத்தில் ஈச்வரன் மாயையின் துணைகொண்டு இவ்வுலகத்தைப் படைத்தார். மாயை ப்ரஹ்ம ஸ்வரூபமாக உள்ள ஈச்வரனின் உடல் போன்றது. ஆகவே இந்த உலகம் முழுதும் ஈச்வரனின் உடல். உலகைப் பார்த்தல் என்பது ஈச்வரனின் உடலைப் பார்ப்பதாகும்.

ஈச்வரன் இரண்டு அம்சத்துடன் கூடியவர் என்று பார்த்தோம். இனி ஈச்வரனின் ப்ரஹ்ம தத்துவத்தைப் பார்ப்போம்.

ப்ரஹ்ம தத்துவம் :-

ஸத்யம் - ஞானம் - அனந்தம் ப்ரஹ்ம என்று உபநிஷத் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை விளக்குகிறது.

ஸத்யம் என்றால் மூன்று காலத்திலும் உள்ளது. அழிவற்றது. மாற்றம் அற்றது.

ஞானம் என்றால் அறிவு ஸ்வரூபம்.

அனந்தம் என்பது பூர்ணமானது.

இப்படிப்பட்ட ப்ரஹ்ம ஸ்வரூபத்தை மாயையுடன் பார்த்தால் ப்ரஹ்மத்திற்கே ஈச்வரன் என்ற பெயர் வருகின்றது. மாயை ப்ரஹ்மத்தைச் சார்ந்து இருப்பதால், அது மித்யா. ப்ரஹ்மன் சுதந்திரமாக இருப்பதால் ஸத்யம்.

# XI ஜீவ ஈச்வர ஸம்பந்தம்.

ஜீவன் என்ற சொல்லின் பொருளை ஆராய்ந்தோம். அதுபோல் ஈச்வரன் என்ற சொல்லும் ஆராயப்பட்டது. ஜீவன் - ஈச்வரன் இவ்விரண்டிற்கும் உள்ள உறவு என்ன என்று இனி பார்க்க வேண்டும்.

ஜீவன் என்ற சொல்லில் ஆத்மா - அனாத்மா இவை அடங்கும், ஈச்வரன் என்ற சொல்லில் ப்ரஹ்ம, மாயா இவை அடங்கும் எனப் பார்த்து ஆத்மாவின் ஸ்வரூபம், ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை சாஸ்திரத்தின் துணை கொண்டு பார்த்தோம். அந்த சாஸ்திரம் ஜீவ - ஈச்வர ஸம்பந்தத்தைக் கூறவரும் போது இவ்விரண்டும் அடிப்படையில் ஐக்கியம் என்று கூறுகிறது. அதாவது உண்மையில் ஜீவனின் - ஆத்மாவின் அடிப்படையில் ஈச்வரனின் ப்ரஹ்மதத்துவத்தின் நோக்கில் ஜீவனும் ஈச்வரனும் ஒன்று என்று கூறுகிறது.

உபநிஷத்துகளில் ஜீவனைக் குறித்துப் பல வாக்கியங்கள் அதாவது அறிவானது புகட்டப்பட்டது. அதுபோல் ஈச்வரனைக் குறித்தும் பல கருத்துக்கள் புகட்டப்பட்டன. ஆனால் எந்த வாக்கியத்தால் ஜீவ ஈச்வரன் இரண்டும் ஒன்று என்ற அறிவு புகட்டப் படுகிறதோ அந்த வாக்கியத்திற்கு மஹாவாக்கியம் என்று பெயர். ஆகவே ஜீவ ஈச்வர ஐக்கிய ஞானத்தைக் கொடுக்கும் வாக்கியம் மஹாவாக்கியம். இவ்விதம் மஹாவாக்கியம் என

அழைக்கக் காரணம் உபநிஷத்தில் இக்கருத்தையே மையமாக அதாவது முக்கியமாகக் கொண்டுதான் ஜீவ ஈச்வரனுடைய தத்துவங்கள் விளக்கப்பட்டன. முக்கியமானதால் மஹாவாக்கியம் அல்லது மேலான ப்ரயோஜனமான மோக்ஷம் இந்த வாக்கியத்திலிருந்து வருவதால் மஹாவாக்கியம் என்று அழைக்கப்படுகிறது.

மஹாவாக்கிய லக்ஷணம் :

'ஜீவ ஈச்வர ஐக்கிய போதக வாக்கியம்' – ஜீவனும் ஈச்வரனும் ஒன்று என்று உபதேசிக்கும் வாக்கியம். இங்கு, இரண்டு பொருட்களை ஒன்று எனக் கூறவில்லை, ஒன்று தான் இரண்டு பெயருடன் விளங்குகிறது என்பதே உபதேசம். மஹாவாக்கியத்திற்கு இனியொரு லக்ஷணம்.

'அகண்டார்த்த போதக வாக்கியம்' பிளவுபடாத ஐக்கிய அர்த்தத்தை உபதேசிக்கும் வாக்கியம். இந்த லக்ஷணத்தின்படி ஜீவ ஈச்வரன் என்ற வேறுபாடு நீக்கப்பட்டு ஒன்று மட்டும் உள்ளதாகப் புரிந்து கொள்ளப்படுகிறது.

மஹாவாக்கிய விசாரம் :-

மஹாவாக்கியம் என்றால் சமப்படுத்துவது என்று பார்த்தோம். ஆகவே மஹாவாக்கியத்தைச் சமன்பாடு (equation) என்று கூறலாம். சமன்பாட்டை அமைக்க வேண்டும் எனில், நிபந்தனை ஒன்று உண்டு. வேறாக இருக்கும் இரண்டை ஒன்று என சமப்படுத்த முடியாது. வேறுபாடு முழுதும் இல்லை என்றால்

சமப்படுத்த வேண்டிய அவசியமில்லை. உதாரணமாக,

5 = 6 எனக் கூறமுடியாது.

5 = 5 என கூறவேண்டிய அவசியம் இல்லை.

ஆனால் 6 - 1 = 3 + 2 என்பது சமன்பாடு. இங்கு முதல் பகுதியும் இரண்டாவது பகுதியும் வேறுபாடு உடையது போல் இருக்கிறது. உண்மையில் வேறுபாடு இல்லை. ஆகவே *equation* - சமன்பாடு என்பது தோற்றத்திற்கு வேறுபாட்டையும் உண்மையில் வேறுபாடு அற்றதாக உள்ள நிலையில்தான் பயன்படுத்த முடியும். மஹா வாக்கியம் என்பது சமன்பாடு.

ஜீவன் = ஈச்வரன் என்று கூறுவது தான் மஹா வாக்கியம். சமன்பாட்டின் லக்ஷணப்படி இரண்டிற்கும் அடிப்படையில் வேறு-பாடு இல்லை. தோற்றத்திற்கு மட்டும் வேறுபாட்டை உடையது.

இங்கு ஜீவன் என்ற சொல்லை ஆராயும் பொழுது ஆத்மா அனாத்மாவின் சேர்க்கையே ஜீவன் என்று பார்த்தோம். அனாத்மா என்பது ஜடமான மூன்று சரீரங்கள். ஆத்மா என்றும் உள்ளது. ஆகவே ஸத்ஸ்வரூபம். அனாத்மாவை அறிவதால் அறிவு ஸ்வரூபம் ( சித் ஸ்வரூபம் ). ஸத் சித் என்பது ஆத்மாவின் ஸ்வரூபம்.

ஈச்வரன் என்ற சொல் ஸத்யமான, ஞான ஸ்வரூபமான ப்ரஹ்மனும் மாயையும் சேர்ந்த தத்துவம் என்று பார்த்தோம். ஆகவே ஜீவனின் ஆத்மாவும் ஈச்வரனின் ப்ரஹ்ம ஸ்வரூபமும் ஒன்று என்று சமப்படுத்துவது தான் மஹாவாக்கியம். ஜீவனை

ஆத்மாவின் அடிப்படையிலும், ஈச்வரனை ப்ரஹ்மத்தின் அடிப்படையிலும் பார்த்து ஐக்கியம் என்று கூறுகிறது சாஸ்திரம். ஆகவே சமன்பாட்டின் இலக்கணப்படி உண்மையான அடிப்படையில் ஆத்மாவும் ப்ரஹ்மனும் ஒன்றாக இருக்கின்றன. அதேசமயம் ஜீவனும் ஈச்வரனும் வேறு கோணத்தில் வேறாக உள்ளன. அதாவது ஜீவனது அனாத்மாவானது ஈச்வரனுடைய மாயையிலிருந்து தோன்றியுள்ளது. ஆகவே மாயை - சரீரம். இதன் அடிப்படையில் பார்த்தால் ஜீவ - ஈச்வர வேறுபாடு இருக்கிறது. மாயை பொய்யாக இருப்பதால் இந்த வேறுபாடும் பொய். இவ்விதம் தோற்றத்தில் வேறுபட்டுக் காணப்படுகின்ற ஜீவனையும் ஈச்வரனையும் அடிப்படையில் வேறில்லை எனக் காட்டுவதே மஹாவாக்கியம். ஜீவன் என்ற சொல்லில் அனாத்மாவை விட்டு ஆத்மாவை மட்டும் கொண்டு, ஈச்வரன் என்ற சொல்லில் உள்ள மாயையை விட்டு ப்ரஹ்மத்தை மட்டும் கொண்டு ஜீவனும் ஈச்வரனும் ஒன்று எனக் கூறுகிறது. ஆத்மா என்ற சொல் ஒரு உடலுக்கு ஆதாரமாக இருக்கும் தத்துவத்தைக் குறிப்பதற்கும், ப்ரஹ்ம என்ற சொல் அதே தத்துவத்தை அகில உலகத்திற்கும் ஆதாரமாகப் பார்க்கும் போதும் பயன்படுத்தப்படுகின்றன. இந்த ஒரு உடலுக்கு எது ஆதாரமோ அதுவே அனைத்திற்கும் ஆதாரம் என்று ஜீவ ஈச்வர ஐக்கியம் ஸம்பவிக்கிறது.

# XII ஞானபலன்.

இறுதியாக இந்த ஜீவ ஈச்வர ஞானத்தின் பலன் என்ன என்று பார்ப்போம். இவ்வித மஹாவாக்கிய ஞானத்தால் நாம் அடையும் பலன் இரண்டு விதத்தில் கூறப்படுகிறது :-

(1) ஜீவன் முக்தி (2) விதேஹ முக்தி.

1) ஜீவன் முக்தி :

ஜீவன் என்றால் உயிரோடு இருந்து கொண்டு இருக்கும் பொழுது என்று பொருள். முக்தி என்றால் விடுதலை. ஒருவன் உயிரோடு இருக்கும் பொழுதே விடுதலை அடைகிறான். எதிலிருந்து விடுதலை என்றால் - துயரத்திலிருந்து. அதாவது நமக்குத் துயரத்துக்குக் காரணமான அறியாமை, ஆசை, கோபம், முதலியவற்றிலிருந்து விடுதலை.

ஜீவன் முக்தியையும் இரண்டு விதத்தில் கூறலாம். ஒன்று மனநிறைவை அடைதல். அதாவது ஒன்றை அடைதல் என்று நேர்முகமாகக் கூறலாம். அல்லது சோகத்திலிருந்து விடுதலை அடைதல் என்று விடுபடுதல் என எதிர்மறையாகவும் நாம் கூறலாம். இதுதான் முக்கியபலன். இதைத்தான் மோக்ஷம் என்றும் சொல்கின்றோம். ஒருவன் மஹாவாக்கிய ஞானத்தால் அடைய வேண்டியதை அடைந்து நிறைவானவன் ஆகிறான்.

2) விதேஹ முக்தி

மோக்ஷத்தை முதலில் ஜீவன் முக்தி என்று பார்த்தோம். ஜீவன் எவ்வளவு காலம் உயிரோடு இருப்பான்

என்றால், அவனுடைய ப்ராரப்தம் என்ற கர்மம் இருக்கும் வரை, அவன் கர்ம வினை முடிந்தால் சரீரம் விழுகிறது. பின் அவன் பிறப்பதில்லை. அந்த நிலை விதேஹ முக்தி என்று சொல்லப்படுகிறது. அதாவது இந்த உடலை விட்டபின் மீண்டும் பிறக்காது ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே இருத்தல் விதேஹ முக்தி என்று சொல்லப்படுகிறது. இந்த விதேஹ முக்தியைப் பற்றி கூறும் பொழுது எல்லா கர்மத்திலிருந்தும் விடுதலை அடைகிறான் என்றும் சொல்லப்படும். ஆகவே இந்தக் கருத்து நமக்குப் புரிய வேண்டும் எனில் கர்மத்தின் தத்துவம் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். இப்பொழுது கர்மத்தின் தத்துவத்தைப் பார்ப்போம்.

நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலுக்கும் பலன் கண்டிப்பாக உண்டாகும். உதாரணமாக நடத்தல் என்ற செயல் செய்தால் ஓர் இடத்தை அடைதல் என்ற விளைவு (பலன்) உண்டாகிறது. ஆகவே எந்தக் கர்மத்தைச் (செயலை) செய்தாலும் அது எதாவது பலனைக் கொடுத்துத்தான் தீரும். இவ்விதம் நாம் செய்கின்ற செயலின் பலன் இரண்டு

1) த்ருஷ்ட பலன் 2) அத்ருஷ்ட பலன்

த்ருஷ்ட பலன் என்பது நம் கண்ணுக்குத் தெரிகின்ற பலன். அத்ருஷ்ட பலன் என்பது நமக்குத் தெரியாத பலன். உதாரணமாக ஒரு பொருளைத் தானமாக ஒருவருக்குக் கொடுத்தால் த்ருஷ்டபலன் நம்மிடமுள்ள பொருள் நம்மை விட்டுச் செல்வது. அத்ருஷ்ட பலன் என்பது புண்ணியம். அதுபோல மற்றவர்

பொருளைத் திருடினால், த்ருஷ்டபலன் நம்மிடம் பொருள் வருதல், அத்ருஷ்ட பலன் பாபம்.

அத்ருஷ்ட பலன் இரண்டு வகைப்படும்.

1) ஸுஅத்ருஷ்டம் அதாவது புண்ணியம்.

2) துர்அத்ருஷ்டம் அதாவது பாபம்.

இந்த இருவிதமான அத்ருஷ்ட பலன் நாம் செய்கின்ற செயலிலுள்ள பாவனையின் (motive) அடிப்படையில் வருகிறது. ஒவ்வொரு செயலையும் செய்யும் பொழுதும் நாம் எப்படிப்பட்ட ஸங்கல்பத்துடன் செய்கிறோம் என்பதைப் பொருத்து புண்ணியம் அல்லது பாபம் என்ற அத்ருஷ்டபலன் ஏற்படுகிறது. இவ்விதம் தோன்றிய அத்ருஷ்டபலனான புண்ணியம் சுகத்தைக் கொடுப்பதன் மூலம் தீர்ந்து விடும், பாவம் துக்கத்தைக் கொடுத்துத் தீரும். ஆக புண்ணியபாபம் என்பது சுக துக்கத்தைக் கொடுப்பதன் மூலம் கழிகின்றது. ஒரு ஜீவன் சுகதுக்கத்தை அனுபவிக்க வேண்டும் என்றால் உடல் தேவை. விதவிதமான சுகதுக்கத்தை அனுபவிக்க விதவிதமான உடல்கள் தேவை. இவ்விதம் ஒரு ஜீவனுடைய கர்மவினை அவன் உடல் எடுப்பதற்குக் காரணமாகிறது. கர்மவினையால் அதற்குத் தக்கபடி உடல் அமைகிறது. அந்த உடலைக் கொண்டு மீண்டும் கர்மவினையைச் சேர்க்கின்றான். இவ்விதம் ஸம்ஸாரம் நடைபெற்று வருகிறது.

ஜீவன் எண்ணற்ற ஜன்மங்களில் கர்மம் செய்து சேர்த்து வைத்துள்ள புண்ணிய பாபக்குவியலுக்கு ஸஞ்சித கர்மம் என்று பெயர். இவைகள் எண்ணிக்கைக்கு அடங்கா. புண்ணிய பாப கர்மபலன் இந்த ஸஞ்சிதத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட புண்ணிய பாப கூட்டங்கள் வெளிப்பட்டு அதற்கு ஏற்ப உடல், ஆயுள், சூழ்நிலை இவைகள் வந்து அமைகின்றன. இவ்விதம் வெளிப்பட்ட கர்மத்திற்கு ப்ராரப்த கர்மம் என்று பெயர்.

ப்ராரப்த கர்மம் என்பது சுகதுக்கத்தைக் கொடுக்க வெளிப்பட்ட கர்மக் கூட்டங்கள். ஆக ப்ராரப்தமாக வந்து அமைந்த உடலின் துணை கொண்டு கர்மபலனைக் கழிக்கும் வேளையில் மனிதன் புதிதாகச் செயல் செய்து புதிய புண்ணிய பாபத்தைச் சேர்க்கிறான். அந்தக் கர்மத்திற்கு ஆகாமி கர்மம் என்று பெயர். இந்த ஆகாமி கர்மம் ஜீவன் இறந்த பின் ஸஞ்சிதத்துடன் சேர்ந்து விடும்.

இவ்விதம் ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமி என்ற மூன்றுவித கர்மங்களைப் பற்றி சாஸ்திரம் பேசுகிறது. உடலினால் புண்ணிய பாபத்தைச் சேர்க்கிறான், புண்ணிய பாபத்தால் உடல் வருகிறது என்றால், முதலில் வந்தது உடலா கர்மபலனா என்றால், முதல் என்றே ஒன்று இல்லை. ஜீவன் அனாதியாக இருக்கின்றான். படைப்பு என்பது வளையம் போல், தோற்றமோ முடிவோ நம்மால் கூறமுடியாத ஒன்று.

ஞானியானவன் கர்மபந்தத்திலிருந்து விடுதலை அடைகிறான் என்று கூறும் பொழுது என்ன பொருள் என்றால், ஞானத்தால் ஸஞ்சித கர்மம் அனைத்தும் நாசம் அடைகிறது. காரணம் - ஸஞ்சித கர்மம் அஹங்காரத்தைச் சார்ந்து உள்ளது. ஞானம் அஹங்காரத்தைப் பொய்யாக்கியதால், அஹங்காரத்தைச் சார்ந்துள்ள அனைத்து ஸஞ்சிதமும் நாசம் அடைகிறது. ஆனால் ஞானத்தை அடைவதற்கு முன்பே வெளிப்பட்ட ஸஞ்சிதத்திற்கு ப்ராரப்த கர்மம் என்று பெயர். அந்த கர்மமானது அனுபவிக்கப்பட்டுத்தான் தீர்க்கப்பட வேண்டும். ஆகவே தான் ஞானத்தை அடைந்தும் ஞானியானவன் ஜீவித்து இருக்கிறான். ப்ராரப்தத்தை அனுபவிக்கிறானே தவிர அவன் அதனால் ஸம்சாரியாக இருப்பதில்லை. அடுத்த ஆகாமி கர்மமும் ஞானிக்குத் தோன்றுவதே இல்லை. ஆகவே ஞானி விதேஹ முக்தி அடைகின்றான் என்றால், அவன் ஸஞ்சித ஆகாமி கர்மத்தை ஞானத்தால் நீக்கி ப்ராரப்தம் முடியும் பொழுது மீண்டும் பிறக்காமல் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே உள்ளான் என்பது பொருள்.

இவ்விதம் ஞானபலன் ஜீவன் முக்தி, விதேஹ முக்தி என்று சாஸ்திரம் கூறுகிறது.

வேதாந்தத்தில் பேசப்படும் கருத்துக்கள் முறையாக, படிப்படியாக, மிக சுருக்கமாகவே இங்கு கொடுக்கப்பட்டுள்ளன. இதைப் படிப்பதன் மூலம் சில தெளிவு வரலாம், பல சந்தேகங்களும் வரலாம். சந்தேகங்களை நீக்கி, தெளிவு பெற முறைப்படி பயின்ற மகான்களுடைய துணையை நாடி சாதகர்கள் பயன் பெறுவீர்களாக.

**சுபம்.**

